REGISTERED—No. M. 108.

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.

Vol. XVIII.] SEPTEMBER 1910. [No. 6.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 அணா,

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையா ரெல்லாமுடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW
AND TAMIL MONTHLY.
ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.

**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**

Overland 8 Annas extra.] *Lalitalaya, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.

**For the Viveka Chintamani Publishing Committee.**

Thin Paper Edition for the people.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4.

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR**
**C. V. Swaminatha Aiyar.**

LALITALAYA, MYLAPORE.
*Madras, S. Septr. 1910.*


---

## விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

### விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதனமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதன முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதாந்த ஸாரம், ஸ்வதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதைக்கப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ் நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இம்மாசாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படி செய்து ஆதரித்து வரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத் துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வாசிப்போர் இகபர சாதனங்களிரண்டினுந் தேறிப் பெறு வாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமான பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அனேகர் அதை ஆதரித்துக் கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழுகிப் போனதில் நேர்ந்த பெரு நஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவதால் வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

**1910 வரு ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.**

சி. வி. ஸ்வாமிநாதய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

## ORDER FORM.

ஐயா,

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால், அணா 5½, இரட்டை சஞ்சிகையானால் அணா 10 அனுப்பவும்.

*Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.]* [God is Love: Knowledge is Power: *Aum.*

ஸத்யமே ஜெயம்—**SATYAMEVA JAYATI.**

புத்தகம். 18.] 1910ஞு ஸெப்டம்பர்மீ, சாதாரணஞு புரட்டாசிமீ [சஞ்சிகை. 6.

# *TIRUKKURAL=THE ESSENCE OF TRUTH.

## *The "Valluvanar's Bequest."*

. . . . "This world is no blot for us
Nor blank; it means intensely and means good.
To know its meaning is my meat and drink."—*Browning.*

"I have meat to eat that you know not of."—*Jesus Christ.*

---

* தெய்வப்புலமைத் திருவள்ளுவர் அருளிச்செய்த திருக்குறள்; பரிமேலழகருரையுடன், செந்தமிழ்ப் பத்திராசிரியர் மு. இராகவையங்காரால் பார்வையிடப்பெற்று மதுரை விவேகபாநு முத்திராசாலையில் பதிப்பிக்கப்பெற்றது. "பாக்கெட் எடிஷன்" விலை ரூபா 1.

## "வள்ளுவனார் வைப்பு"

எனச் சிறப்புப்பெயரேய்திய

# திருக்குறளியல்.

### குருவணக்கம்.

"அருவேயுருவும் உருவேயருவுமாத்
திருவுருவானது ஸ்ரீகுருவாம்."
—மாயாண்டிச்சித்தன்.

"பிதற்று முணர்வை யறுத்துப் பிரபஞ்ச
விகற்ப முணர்வதே வீடு."—ஔவைகுறள்.

"உலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்"
தன்னிய லாகியும் தானவ னாகியும்
மின்னிய லால்மா முனிவர் மனப்புகுந்
தொன்றிய சீர்மையை உள்ளுற வுணர்ந்தார்
நன்றாநன் றிதுவென நயந்துகொண் டாடும்
மன்றி லாடுமோர் மாயவன் கூத்தை
அறம்,பொரு, ளின்ப மெனவே பகுத்து
அப்பாலுக் கப்பாலாம் அத்தனைக் காட்டி
அவனையே உலகுக்கு ஆதியாக் கொண்டு—
(1) "அகர முதல வெழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே யுலகு"—எனத்
திருக்குறள் பாடிய தெய்வப் புலமைத்
திருவள் ளுவனார் பொன்னடி சரணம்
புகுந்து நின்றனம் போற்றி போற்றியெனவே.

* * *

### முதலெழுத்தோதிய நூலின்பெருமை.

இப்பெருந் தகையார் இன்னிசைக் குறளால் ஓதிய தமிழிற்கு, உண்மையி லெழுந்த உள்ளறிவாலே உரையிடத்தானும் உரிமைபூண்டவப் பரிமேலழகர் உரையிதுவாமே: "எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலினையுடையன; அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து."

நுண்பொருளைக் கூறும் நூல்களுக்கெல்லாம் எழுத்து ஆதாரம்; அந்த எழுத்துக்களுக்கெல்லாம் முதலாயுள்ளது அகரமாகிய உயிர் முதலெழுத்து. அவ்வுயிர் முதலெழுத்தும் உண்மையில் ஸ்வரமாத்திரமானதே. ஆதலால் ஸர்வ கலைகளுக்கும் உலகியலுணர்த்தும் வேதசாஸ்திர முதலிய நூல்களுக்கும் ஆதியாயுள்ளது பிரணவத்தின் முதல்மாத்திரையாம் அகாரத்தின் ஸ்வரூபமான ஸ்வரமே. பிரணவ முதல் மாத்திரையான இந்த 'ஸ்வரம்' தானே நாததத்துவத்திற்பிறந்த சப்ததன்மாத்திரையென்று தத்துவ தரிசனத்தில் தானேவிளங்கும். இது உவமானம். இஃதேபோல் உவமேயத்திலும் பொருந்தும். நூல்களுக்கெல்லாம் எழுத்துக்கள் ஆதாரமா யிருப்பதுபோல், உயிர்களுக்கெல்லாம் உலகம் ஆதாரமாம். அந்த உலகுக்கெல்லாம் ஆதாரமாய் அகாரத்தைப்போல் எல்லாவற்றிலும் வியாபித்து அந்தர்யாமியா யிருந்துகொண்டு அவற்றை விளங்கச்செய்வது ஆதிபகவன். "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்"—என்று சுருதிவாக்கியமு மிருப்பதாலே, உலகுக்கெல்லாம் ஆதிமுதற்காரணமாயிருப்பது "ஆதிபகவன்." இந்த ஆதிபகவனை "Logos" என்றும் "Word" என்றும் யேசுவழிப்பட்ட "ஜான்" என்னும் யோகசித்தர் ஓதியிருக்கிறார். அஃதொன்றையேதான் விஷ்ணுவென்றும் ஹரியென்றும் ஓதியுள்ளார் சித்தாந்த வழிபற்றிய நம் யோகசித்தர். ஏனெனில் 'அப்பர்' ஸ்வாமிகள் தேவாரத்தில், .

"எரியலால் உருவமில்லை ஏறலாலேறவில்லை, கரியலாற் போர்வையில்லை காண்தகு சோதியார்க்கு, பிரிவிலாத் தேவர்கூடிப் பெருந்தகை பிரானென்றேத்தும், ஹரியலால் தேவியில்லை ஐயனை யாறனார்க்கே"

என்று பாடியிருப்பதால் சகுண நிர்க்குணமிரண்டு மொன்றேயன்றி யிரண்டல்ல வென்பது தானே யேற்படும்.

"ஸத்யம் வத" என்று வேதம் ஓதியதுபோல், உலகவழிபற்றி நின்றும் உண்மையை உள்ளபடி யுரைப்பதே "கடவுள் வாழ்த்து" என்றும், † திரிகரணசுத்தியே திரிமலந்தீர்த்து ஸ்ரீ குருதரிசனம் அளிக்கும்என்றும், சகஜஞானப் பெருங் கொள்கையை மேற்கொண்டியற்றிய திருக்குறளின் அருமை பெருமையை, அவ்வள்ளுவனார் காலடித்தூசியும் பெறாத யானோ எடுத்துரைக்க வல்லேன்! ஆயினும் அவர் திருவடித்தூசி தலைமிசைப்படிந்ததோர் திவ்யகாரண மஹிமையால், அவர் காலடிசரணைக் கண்டதை யுண்டு விண்டுரைசெய்யக் கற்பகவிநாயகர் காப்பதுவேண்டிக் ‡ கரைந்து நிற்போமே.

* * *

## முதலெழுத்தோதுதல்.

" தாயேநீவாலை தயவுடை சுந்தரி
நாயேனைமாலை நயமுடன் கூடியே
வாயேனுனக்குள் 'அ'வறியா தென்னென்று
மாயேநீ மறைந்துபின் சாலைவந்தோதினை."

உயிருக்கெல்லாம் முதலாயும் ஆதிகாரணமாயுமுள்ள இந்த அகாரத்தை (பிரணவத்தின் முதல் மாத்திரையை) ஓதுதல்தானே வேதமோதலாம். வேதங்கள் எல்லாம் ஸ்வர மாத்திரையானபடியால்தான் அவைகளை "எட்டில் எழுதி வைத்தல் ஒண்ணாது" என்று ஏற்பட்டது.

" காட்டுக் குறியுங் கடந்தவர் காரணை
மேட்டின்புறத்திலெழுதிவைத்தென்பயன்!"

என்றார் திருமூல நாயனாரும்!

"எட்டின் புறத்திலெழுதிவைத்தென்பயன்" என்ற அந்த முதலெழுத்து. ஓதற்பாலதேயன்றி எழுதற்பாலதல்ல! எழுத்துக்களுக்கெல்லாம் முதலாகவுள்ள அகார மாத்ரை ஸ்வரூபமான ஸ்வரமும், நாத தத்துவத்தில் தானே யடங்கும்.

"பூத முதலாகவே நாதபரியந்தமும் பொய்யென்றெனைக் காட்டியென்" தற்போதத்தை யாட்டியழித்துப் பின், அந்தப் "போதத்துள் நடுவாக அடியீறுமில்லாத போதபூரணவெளிக்குள் ஏதுமற நில்லென்றுபாயமாய் வைத்து, நினைவெலாஞ்செய் வல்லசித்தாம், இன்ப உருவைத்தந்த அன்னையே" சாட்சியாச் சொல்கிறேன், ஸத்திய மிதுவென்றே "உணர்க உணர்விலார்." ஊனுணர்விலா தொழித்த உத்தமர் தம் சித்தத்துள் பிரகாசிக்கும் தஹராகாச வெளியில் நாம் தேவிசாக்ஷியாகச் சொன்னது ஸத்தியமென்றே யுணர்ந்துய்வாராக.

* * *

## 'வேதம் அனாதி'யென்பதன் பொருள்.

இப்படியாக, எட்டிலெழுதப்பெறும் எழுத்துக்களுக்கெல்லாம் முதலாக (மூலகாரணமாக)வுள்ள அகாரமும் (ஸ்வரமாத்ரையான நாததத்துவமும்) கடந்து நின்ற கடவுளை யுணர்த்தும் வேதம் குருமுகமாக ஓதத்தக்கதேயன்றி எழுத்துமூலமா யறியத்தக்கதல்ல. இதுகாரணம் பற்றியே "வேதம் அனாதி" யென்று பேர்பெற்றுள்ளது. "மோக்ஷமூலர்" என்றுபேர்புனைந்துகொண்ட (Professor Max Muller) வேதங்களை யெல்லாம் மொழிபெயர்க்கிறேனென்று அச்சிட்டு முடித்துக் கடைசியில், அதன்பொருள் இன்னதென்பதை யறியமாட்டாதவராய் "வேத மந்திரங்களெல்லாம்" வெறும் குப்பை கூளங்களேயன்றிப் பின்னர் வேறொன்றுமில்லையென்று தம்தலையறியாத வேதத்தின் பொருளறியாது மயங்கித்தியங்கி யேதோ அவர்கற்ற கல்விக்குச் சரியாகத் தோன்றியதை யெழுதிவைத்துவிட்டுப் போனார். அதைச் சொல்லிக்கொண்டு அநேகர் வேதத்தைப் பழித்து வேதமந்திரங்களை யிகழ்ந்து "கன்னா பின்னா"வென்று எழுதி யச்சிட்டுத் தாமும் கெட்டுப் பிறரையும் கெடுமதிக்காளாக்கி வருகிறார்கள்.

† Compare: Emerson's Dictum. "Our Theism is the purification of the human mind" which stands as a motto of the Vivekachintamani.

‡ உள்ளங்கரைந்தாரை உள்ளபடி காப்பவரானதால் 'கரைந்து நிற்போமே' என்றதனுண்மை யுணர்க.

கற்றதனாலாய பயன்.

* இதையறிந்தே யெம்பெருமான் திருவள்ளுவநாயனார் அடுத்த குறளை மெய்க்கெல்லாம் முதலெழுத்தான ககாரங்கொண்டு துவக்கிக்

(2) "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றாள் தொழாஅ ரெனின்".

[எல்லா நூல்களையுங் கற்றவர்க்கு அக்கல்வியறிவானாயபயன்யாது, மெய்யுணர் வினையுடையானது தாள்களைத்தொழாராயின்?—பரிமேலழகருரை.]

நாதமுங்கடந்து நாதாந்த வெட்டவெளியாய் நிற்குமென் அருட்தாய் அருள்பெற்று ஞானப்பாலுண்டு கடவுளைத்தொழுது பிறப்பறுக்கவல்லாரே "கற்றதனாலாய பயன்" பெற்றார். மற்றவர் கற்றகல்வியினாலாயபயன் ஒன்றுமில்லை யென்க. "மோக்ஷமூலலரை"ப்போல் கற்றுவல்ல கசடர் உலகில் மிகுதிபற்றியே, அவரால் உலகத்தார் கெட்டுப்போகாதபடி, இந்தக் குறளையுங் கடவுள் வாழ்த்தாகக் கூறினார்.

* * *

பொய்யைத்தள்ளி மெய்யைத்தழுவுதற் பயன்.

முதற்குறளால் மெய்யைச் சொல்லி யிரண்டாங்குறளினுல் பொய்யைத் தள்ளினார். விவேகிகள் பொய்யைத்தள்ளி மெய்யைத் தழுவுவதினாலுண்டாகும் பயனை மூன்றாவது குறளில் எடுத்துரைக்கிறார்.

(3) "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்
நிலமிசை நீடுவாழ் வார்." [கார்

மலர்மிசை அன்பினால் நினைவாரது உள்ளக் கமலத்தின் கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேரலின் "மலர்மிசை யேகினான்" என்று கடவுளுக்குச் சிறப்புப் பெயர் வந்தது. அவனுடைய மாட்சிமைப்பட்ட அடிகளைச்சேர்ந்தார் "நிலமிசை நீடுவாழ்வார்"—வீடுபெற்று நிலமிசை நித்திய வாழ்வெய்துவர்.

* * *

"ஆதியாய் நின்ற அறிவு."

இம்மூன்று குறட்பாக்களின் கருத்தைச் சுருக்கி ஔவையார் ஒருகுறளில் "பிறப்பினிலே"யுணர்த்துவான் முதலில் உண்மையை ஓதியிருக்கிறார். அது இது:—

"ஆதியாய் நின்ற வறிவு முதலெழுத்
தோதிய நூலின் பயன்."

எட்டில் எழுதப்பெறும் நூல்களுக்கெல்லாம் ஆதியாய் (மூலகாரணமாய்) உள்ளது எழுத்துக்கள். எழுத்துக்களுக்கெல்லாம் முதலாய் (மூலகாரணமாய்) உள்ளது அகாரம் (ஸ்வரம்). அந்த முதலெழுத்துத்தானே பிரணவத்தின் முதல் மாத்திரை. எல்லாவெழுத்துக்களுக்கும் (அவை மூலமாய் எல்லா நூல்களுக்கும்), எழுதப்பெறாது காட்டுக்குறி (சின்முத்திரை) யாவாக நிற்கும் பிரணவத்திற்கும் முதலாய் நிற்கும் பிரணவ நாதத்தின் ஸ்வரமாத்ரமாயுள்ள இந்த முதலெழுத்தோதிய நூலின் (வேதத்தின்) பயன் "ஆதியாய் நின்ற அறிவு". இந்த "ஆதியாய் நின்ற அறிவு" தனைப் பெறுதலே "கற்றதனா லாயபயன்". ஏனெனில் ஆதிபராசக்தியின் உணர்வு (தரிசனம்) இன்றி அருட்பேறில்லையாம்; அருட்பேறில்லாவிடத்து "வாலறிவன் நற்றாள்தொழுத"லும் இல்லையாம். இதனாலே "கற்றதனாலானபயன்" சித்சக்தியின் அருட்பேறு பெறுதலென்றும், அந்த அருட்பேற்றினால் "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்" நிலமிசை கைவல்யசித்திபெற்று நித்திய வாழ்வெய்துவரென்றும் கொள்ளத்தக்கது.

* Compare the following quotation from Max Muller by a Rev. Father of the Church of Rome in a red pamphlet which has caused much pain to Hindus in Ceylon: "Still it cannot be denied that the sacred books of the East are full of rubbish, and that the same stream which carries down fragments of pure gold carries also sand and mud and much that is dead and offensive."—(*Preface to the Sacred Books of the East.*)

### இலக்கியங்கண்டதற் கிலக்ஷணம்.

இம்மூன்று குறள்களினாலும் லக்ஷியங்கூறி, இனி "லக்ஷியங்கண்டதற் கிலக்ஷண மியம்புகிறார்."

"முனிமானஸ ஹம்ஸிகாயை நம:" என்றும், "பக்தமானஸ ஹம்ஸிகாயை நம:" என்றும் கூறியுள்ள இரகஸிய நாமங்களின் லக்ஷியத்திற்கேற்க, "அன்பால் நினைந்தவர் உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்தவடிவோடு விரைந்து சேரவின்" "மலர்மிசை ஏகினான்" என்று லக்ஷியங்கொண்டு சிறப்புக்கூறிய கடவுளின் லக்ஷணங்கூறக்கருதி, நித்திய, நிர்மல, நிஷ்கள, நிராலம்பமான நிர்க்குணக் கடவுள் ஹிருதயகமலத்தின்கண்ணேயுள்ள தஹராகாசத்தில் "ஏகினான்"—புகுந்தானாகவும், அவனுடைய அனந்தகுண நித்திய கலியாணங்களைக் கூறுகிறார்.

* * *

### "வேண்டுதல் வேண்டாமையிலான்."

(4) "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்
கியாண்டு மிடும்பை யில." [ந்தார்க்

நிஷ்கள நிர்க்குணக்கடவுள், அருள்பெற்றாரை யனுக்ரகிக்கவேண்டி, சகளவடிவாய், அவர் ஹிருதய கமலத்தினுள்ள தஹராகாசத்திற் புகுந்து திருவுருக்கொண்டு தோன்றினாலும், அவருக்கு "வேண்டுதல் வேண்டாமை" இல்லை. ஏனெனில், அவர் "ஸர்வகாரண பூதசக்தியான தேவியின் பாங்காயிருத்தலினாலே யென்க.

நிர்க்குண ப்ரஹ்மத்தையேயன்றி சகுண ப்ரஹ்மத்தை ஆச்ரயித்து "அவன் அடி சேர்ந்தார்க்கு" (சித்திபெற்றார்க்கு) "எக்காலத்தும் பிறவித்துன்பங்கள் உண்டாகா" என்று அனுபூதியுரைத்தலையே கடவுள் வாழ்த்தாகக்கொண்டு சொல்கிறார்.

* * *

### "இருவினை நேரொப்பு."

மூன்று நான்காவது குறள்களினால் ஸஹஜானுபவம், ஸ்வானுபவ மிரண்டையும் சொல்லி, ஐந்தாவது குறளில் "அணைந்தோர் தன்மை" கூறுகிறார்.

"இருவினை நேரொப்ப வின்னருட் சக்தி
குருவென வந்து குணம்பல காட்டித்
தருமென ஞானத்தாற் றன்செய லற்றாற்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே."

என்றோதியுள்ள திருமந்திரோபதேசப்படிச் "சிவனவனாகி" "இறைவன்" மெய்ம்மை சேர்ந்தபுகழை விரும்பினோரிடத்து, மயக்கத்தைத் தரும் "இருவினையுஞ் சேரா" என்பது 5-வது குறளின் கருத்தாம். அது இது:—

(5) "இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

இதனால் "அணைந்தோர் தன்மை" கூறி அடுத்த 6-வது குறளில், அவரையடைந்து அவர் ஒழுக்க நெறியின் வழுவாது நின்றவர்" தாமும் "நீடு வாழ்வார்"—பிறப்பறுத்து எக்காலத்தும் ஒரே தன்மையராய் வாழ்வார் என்று கூறி,—

(6) "பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொ
நெறிநின்றார் நீடு வாழ்வார்" [ழுக்க

என்று அதையே கடவுள் வாழ்த்தாக அர்ப்பணஞ்செய்கிறார் ஏனெனில், கடவுள் தன்னையடுத்தார் வசத்தினராதலாலும், அவர்கள் தம்மையடுத்து அறவழி நின்றாரை ஆச்ரயிப்பவராயிருத்தலினாலும் என்க. "தில்லைவா ழந்தணர் தம் அடியார்க்கும் அடியன்" என்று பகவான் தானே அடியெடுத்துக் கொடுத்ததையும் உள்ளாய்ந்து உணர்க.

* * *

### "மனக்கவலை மாற்றவழி."

இதனால் விஞ்ஞானகலருக்கு பிறவித்துன்ப நீக்கம் சித்திக்கும் உபாயங்கூறி, அவ்வளவு பரிபக்குவம் சித்திக்கப்பெறாது, "மனக்கவலை" மட்டும் தீர்ந்தால் போதுமென்னும், பிரளயாகலரான ஜீவன்களுக்கு, அத்துன்பந்தீரும் வழியும் கடவுளை யடைதலே யென்றுவற்புறுத்திக் கூறுவான்,—

(7) "தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தா
மனக்கவலை மாற்ற லரிது" [ர்க் கல்லால்

என்கிறார்.

உலகத்தார் துன்பந் துடைத்தல்வழி புகட்டுதலால், இதுவும் கடவுள் வாழ்த்தேயாம்.

* * *

"தர்மம் சர."

பிறகு 8-வது குறளில் "தர்மம்சர" என்னும் வேதவாக்கை யனுசரித்து அறத்தைப் பிரித்து ஸம்ஸார ஸாஹரத்தில் விழுந்துழலும் சகளஜீவன்களுக்கு அறவழியைச் சிறப்பித்துக் கூறுவான்,—

(8) "அறவாழி யந்தணன் தான்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லறிது."

என்றுகடவுள்வாழ்த்துக் கூறுகிறார். ஏனெனில் "தர்மம் சர" என்னும் வேதவாக்கை யனுஷ்டிப்போர் குருசேவை பெற்றுய்யத் தன்னாலே அருகராவர்.

"அறவழி யேயது குருவழி யாம்
மறவழி யெல்லாம் பிறவழி யாம்
அறவழி யேதனி வழிகடந் தால்
அறவழி யேகுரு எதிர்ப்படு வார்."*

* * *

"வணங்காத்தலை" "காணுக்கண்."

அறத்தைச் சொல்லிப் பின் "தீவினை விட்டீட்டல் பொருள்" என்று ஒளவையார் ஓதிய "அர்த்தம்" என்னும் பொருட் பகுதியைப் பொருந்தப் பொருத்தி யதுவும் கடவுளை வழிபடுதற்கானதோர் வழியாமென்பதை எற்புறுத்துவான்,

(9) "கோளில் பொறியிற் குணமிலவே யெண்
றாளை வணங்காத் தலை." [குணத்தான்

என்றோதலானும்.

அஷ்டகுண கலியாணரான கடவுளை வணங்காத்தலைகள், காணுக்கண் கேளாச்செவிபோல், பயனிலாதனவாம்—என்றார்.

"எண்சாணுடம்புக்கும் சிரசே பிரதான" மாதலால், சகளவடிவினரான ஜீவர்களின் கடவுளைவணங்கா (அதாவது, தீவினைவிட்டு தர்மத்தையநுசரித்து ஒழுகாத) தலை, (உடம்பு, ஜன்மம்) பிரயோசனமற்றதாமென்றபடி. அறவழி நின்றொழுகவும் பக்குவம் போதாது பொருளீட்டலிலேயே கருத்தாயிருப்பவர் உய்யும்பொருட்டு அஷ்டைசுவரியங்களுக்கும் இருப்பிடமாய் அனந்தகுண கலியாணராயிருக்கும் சகளவடிவினரான "எண்குணத்தான் தாளை" வணங்காத் தலையானது "காணுக்கண்போல்" இருந்தும்பயனில்லை யென்றார். "உடம்பினைப்பெற்ற பயன்" சித்திபெருமையால் "குணமில" என்றார்.

* * *

"உடம்பின் பயன்."

"உடம்பின் பயன்" என்ன வெனிலோ, ஒளவை தம் குறளிற் சொல்லக்கேண்மின்:—

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண்."

7, 8, 9-வதாகிய மேற்கண்ட மூன்றுபாட்டுக்களாலும் "கடவுளை" நினைத்தலும், வாழ்த்தலும், வணங்கலும் செய்யாவழிப் படுங் குற்றங் கூறப்பட்ட" தென்பர் மேலோர்.

* * *

திரிகரணசுத்தி : திரிமலந்தீர்த்தல்.

மனக்கவலைமாற்றக் கடவுளை நினைத்தலும், ஸம்ஸார துக்கம்நீங்கக் கடவுளை வாழ்த்தலும், உடம்பின் பயன்பெறக் கடவுளை வணங்கலும் வேண்டுமெனத் திரிகரணங்களாலும் கடவுளை வழிபடுமுறை செப்பிக் காரணகாரிய தோரணையாக (தொடர்ச்சியாக) வரும் "பிறவிப்பெருங் கடலை"த் திரிகரணங்களாலும் கடவுளை வணங்கித் திரிமலந்தீர்ந்து "இறைவனடி சேர்ந்தவர்" மட்டுமே மூழ்கிப்போகாமல் நீந்தி அக்கரையாகிய பேரின்பவீடு பெறுவர். அப்படி "இறைவனடி சேராதார்" நீந்தாராகி மூழ்கிப்போய் சகளராய்த்தானே பிறந்துபிறந்திறப்பர் என்பான்

(10) "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்."

என்று பத்தாவதான † தசமஸ்தானத்திலிருந்து உண்மையை உள்ளபடியுணர்ந்து "ஸத்யம் வத" என்னும் வேதவாக்கையனுசரித் துண்மை

* விவேகசிந்தாமணி 128-வது பக்கம் பார்க்கவும்.

† "தசமியிலே சாகரத்துக்கப்பாலேறிச் சிலம்பொலியுமுனதுடைய இருக்கால் கண்டு" என்றதனால் தசமஸ்தானம் பிறவிக்கடல் தாண்டி யுள்ளதென்றுணர்க.

கூறுதலே கடவுள் வாழ்த்தெனப் பத்துப்பாக்களினாலும், "அம்பாம் வாழ்க"வென்றுசீர் வசனம் சொல்லிய ஆண்டியைப்போல், "கடவுள் வாழ்த்து"க்கூறி முடித்தார். இப்படியே அறம், பொருள், இன்பம் என்கிற முப்பகுதியிலும், கடவுளை வழிபடுதலையே முக்கியமாகக்கொண்டு, "வள்ளுவர் தம் வாயால் கேளாதனவெல்லாங் கேட்டு" இறைவனைத் தலைவனாகக்கொண்ட சங்கப்புலவர்கள் ஒவ்வொருவரும் வியப்பு முவப்புமடைந்து அக்குறள்பாடிய அவரையும் அக்குறளையும் அபேதமாகநினைத்து வாழ்த்திய கவிகளை "திருவள்ளுவமாலையில்" காணலாம். அவர்களிலொருவரான சீத்தலைச்சாத்தனார், அச்சங்கத்தவராயிருந்ததனாலே யவ் வித்வத் சபையில் அரங்கேற்றப்பெறும் நூல்களிலுள்ள குற்றங்களைக் கேட்கப்பொறாதாராகி, "ஐயோ என் தலைவிதி இதையெல்லாங் கேட்டிருக்கப் படைத்ததே" யென்று, தலையிலடித்துக்கொண்டு புண்பட்டு "சீத்தலை" யாயினர். அப்படிப்பட்ட சாத்தனார்

"கடுகைத்துளைத் தேழ்கடலைப்புகட்டிக்
குறுகத் தறித்த குறள்."

எனப்பெருமைபெற்ற இந்நூலில் விவரிக்கப்பெற்ற "வள்ளுவர் முப்பாலால், தலைக்குத்துத் தீர்வு" பெற்றாரென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏனெனில் இதில் அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலால் கூறியவெல்லாம் இறைவன் வழிப்பாடாகவே யிருந்ததனால் எல்லாமிறைவன் மஹிமையையே கூறுவதாயிருந்ததுபற்றி யென்று கொள்க. சகஜ ஞானத்தில் ஸர்வம் பிரஹ்மமயமென்கிற அனுபவம் உதிக்கின்றமையால், அவர்கள் வாய்ப்பிறப்பெல்லாம் வேதவாக்கே. பரை, பச்யந்தி, மத்தியமை, வைகரி யென்னும் நான்குவாக்குக்களும் ஒன்றுக்கொன்று பொருந்தப் பொருத்திப் பேசுந்திறன் அவர்களுக்கேயுண்டு. இதற்குச் சான்றாகப் பொய்யாமொழிப்புலவர் அனுபவத்தை யிங்கெடுத்துரைப்போம்:—

"வள்ளுவனார் வைப்பு" வாய்ப்பு.

"முப்பாலு முண்டோம் முலைப்பா லினிதுகரோம்
அப்பாலுக் கப்பாலு மாயினோம்—எப்பொருளும்
உள்ள படியுணர்ந்தோ மோதிக் குறைதீர்ந்தோம்
வள்ளுவனார் வைப்பெமக்கு வாய்த்து."

"வள்ளுவனார் வைப்பு" (பொக்கிஷம்) நித்தியமாயுள்ளதாதலின் எமக்கும் வாய்த்தது: எப்படியெனில், சொல்வோம். இந்தத் திருமயிலையின்கண்ணே வடபாரிசத்திலுள்ள திருவள்ளுவர் கோயிலில் "வள்ளுவனார்" திருவுருவமைந்து கருவுருமிகுந்த "கல்லுரு" வொன்றிருக்கிறது. அவ்வுருவைப் பிடித்ததன்கருவைப்பெருக்கி யக்கருவும் கரையக்கரைந்துருகி மனம் "திருவுரு"வாகவும் அவர் திருவுருத்தானும், "ஸ்ரீகுருமூர்த்தமாய்" "ஸ்ரீயுரு"க்கொண்டு, காரிருள் நீங்கப் பேரருள் தந்தெனைப் பேசாமடந்தையாப் புணர்ந்துருக்காட்டி யுருவழித்தேயினும் அருவாயிருந்து உருவாயமர்ந்து, "அருவேயுருவும், உருவேயருவுமாய்த், திருவுருக்கொண்டெனைத் தேற்றியேவிட்டது". ஆனதுபற்றி யான் அவரையே சிந்தித் தூனுணர் வொழித்து உண்மையே கதியாக் கிடந்ததோர் போது,—

அடியளவாலே குறள்வடிவாயின
அடிமுடிகாணாப் பொருள்குறி தமிழ்வேதம்
†வடிவளவாலும் குறள்வடிவேயாகி
அடிமுடிமேல்காணக் குறிகாட்ட லாயிற்று.
காட்டிய குறியைக் கண்டதிலிருந்தேன்.
சாட்டியநெறியை விண்டதிலுரைத்தேன்.
சாட்டியும் ஆட்டியும் ஒட்டியநெறியைக்
காட்டிய கைக்குறி தன்னில் காணார்,
தீட்டியபுத்தியின் தெள்ளறிவாலே
யீட்டியதிருக்குறள் முப்பாலதனையும்
காட்டியகுறள்வடி வானதோர்பதிப்பில்
நீட்டிநீட்டிப் பொருள்பெறநீட்டித்
தாட்டியாகவே தானவனுமள
ஆட்டியூட்டியுணர்ந்துய்வாரே!.—ஓம் தத்ஸத்.

† Refers to the pocket edition of the work now under review and the memories of *Self-Experience* its reading aroused in the writer.

# "MYSTIC DALLIANCE" AT TIRUVALLUVAR'S.

"பின்னுரை."

[அகாரமாம் உயிர்முதலெழுத்தைக் கொண்டு துவக்கிக் ககாரமாம் மெய்ம்முதலெழுத்தடுத்துவா உயிருடலிரண்டு மொன்றிய பிரஹ்மாத்மைக்கிய ஸ்வரூப லீலையைப் புருஷார்த்தம்பற்றிப் போதிப்பான் முப்பாலால் கூறத்தக்க தனைத்தினையுங் கூறிக் கடைசியில்,

"ஊடுதல்காமத்திற் கின்பமதற்கின்பங்
கூடிமுயங்கப் பெறின்."

என்று னகாரத்தால் முடித்துப்பின்னர்,—

"மௌனமந்திராதிச்ப வித்தையினுல்" முப்பாலுக்கப்பாலாய் விளங்கும் "வீட்டுநெறிப்பாலைக் காட்டேக்குறியுங் கடந்தவர்" என்பான், இடதுகையில் திருக்குறட்சுவடியும், வலதுகையிலுள்ள ஜபமாலை அஜபாமந்திரயோகசித்தியில் நழுவிக்கையி லசைவின்றி தொங்கிக்கொண்டிருக்க" "காட்டுக்குறியுங் கடந்தவர் கர்ரணத்தை, யேட்டின்புறத்தி லெழுதிவைத்தென்பயன்!" என்று சிந்திப்பார்போல் சிந்திக்கச் சித்தவிருத்திநிரோதனத்தில் சிந்தைநழுவிப்போகவும் அப்படியே சமாதியுற்று, "இதுதான் வீட்டுப்பால்" என்று "பரனை நினைந்திம்மூன்றும் விட்டார்க்கு" ஓதாதோதுவார் (தக்ஷிணாமூர்த்தி) திருக்கோலங்கொண்டு வீற்றிருக்கும் அவர் திருக்கோயிலில் நடந்ததோர் அதிசயத்தைத் "திருவூடல்" என்னும் தலைப்பின்கீழ் 1904-ம்வருஷத்தில் (Vol XIII. No. 3) ஜூலை மாசத்து விவேகசிந்தாமணியில் வெளிவந்தவாறு, வியாக்கியானங்களை நீக்கிச் சுருக்கமாகவே பிங்கெடுத்துரைத்தல் "இறைவனடி தொழுவார்க்கு" இனிப்பாயிருக்குமென்று அன்பர் ஒருவர் வற்புறுத்தினதன்மேல் அதனைக் கீழேயெடுத்து வரைகிறோம்.]

## "திருவூடல்."

"ஈதலறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காத லிருவர்க்குங் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம்; பரனைநிந்திம் மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு."—ஔவையார்.

### I

அபேதபாவத்தில் மும்மல நீக்கம் அல்லது திரோதான நிவர்த்தி.

The Cleansing of the Spirit.

"நஞ்சனிலாவிடில்பஞ்சமர்நீவிர்கெட்டிடுவீரெனுள்பேதமிலள்
வஞ்சநினைத்திலள்வாய்மையேசெப்பினள்நெஞ்சகத்தேயெனைவைத்தஅவள்;
பஞ்சமர்கெட்டிடில்வெஞ்சமர்விட்டிடுமென்றேயியம்பினன்வேறற்றே;
சஞ்சலநீங்கச் 'சா-மா'வெனவழைத்தஞ்சறவென்னையடித்தனளே!"

### II

சத்திநிபாதம், என்னும் திருவருட் பிரசாதம்.

Growing in the Light of Grace.

"நெஞ்சயர்ந்தம்மா அச்சா அஉம்என்றழுதனனென்
கிஞ்சித்துமென்னிற்குறையோராதவள்கொஞ்சினள்காண்
தஞ்சமாத்தரையில்ஓமெனப்பழுத்துவிழுந்துபுரண்டேனை
அஞ்சலென்றவளார்வநிறைந்தெடுத்தாரமுதூட்டினளே!"

III

"ஸாயுஜ்ய ஸாம்ராஜ்ய" மென்னும் முத்திசித்தி.

Entering the Kingdom of God, or Freedom of Soul.

"ஊட்டினள் அன்பள் உண்டனன் அருளன்!
ஈட்டினபொருளெலாமென் றனக்கின்றனள்
ஆட்டியுங்காட்டியுஞ்சாட்டியுமென்றனை
ஓட்டிபோட்டிஓமிலடைத்தனள்."

IV

துதி.

Praise.

ஆள்வாரற்ற மாடாய்த் திரிந்த அறிவிலியை
மாள்வார் வலையிற் சிக்காதுகாக்க மருட்டிவிட்டு
ஆள்வான் தனிகிளைத் தன்பா லழைப்பித்துக்
† கேள்வியிலாத வள்ளுவன் கோயிலிற் கட்டினள் வல்லவளே!

ஓம் தத்ஸத்.

---

## Easy lessons in Economics-IV.

### குடிவாழ்க்கை.

### பாடம் IV. தொழில்.



அமெரிக்காவில் விளைந்த கோதுமை இங்கிலாந்திலுள்ள ஜனங்களின் ஆகாரத்திற்கு அவசியமாயிருப்பதால், அதைப் பயிர்செய்பவர்களுக்கும், அவர்களுக்குவேண்டிய கருவிகளைச் செய்துகொடுப்பவர்களுக்கும், விளைந்த தானியத்தைக் கப்பலேற்றி இங்கிலாண்டுக்குக் கொண்டுபோகிறவர்களுக்கும், அவ்விடத்தில் அதை உணவுப் பொருளாக மாற்றுகிறவர்களுக்கும் தனித்தனி இவ்வளவுபாகம் போய்ச்சேருமென்று கணக்கிட்டுக் கூறுதல் அசாத்தியம்.

இந்தியாவிலிருந்து பஞ்சு இங்கிலாண்டுக்கு ஏராளமாய் ஏற்றுமதிசெய்யப்படுகிறது. அது ஏற்றுமதி செய்யப்படும் பொருட்டு அதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் பஞ்சாலைக்குக் கொண்டு போய் மூட்டைகட்டப்பட்டுத், துறைமுகம் கொண்டுபோய் கப்பல்மார்க்கமாய் இங்கிலாந்துக்குக் கொண்டுபோகப்பெற்று, அவ்

---

† "நாதமுங்கடந்த காரணத்தால் கேட்கப்படும் சுருதி வாக்கியங்களுக்கு மப்பாலுள்ள" என்றதனால் "மௌன மந்திராதிக்யவித்தையினலே, 'காட்டுக்குறியுங்கடந்த வீட்டுப்பால் தன்னை' நித்தமுத்தநிர்விகற்பசமாதியிலிருந்து விளக்கிக் காட்டுகிற வள்ளுவனா" என்பது பெறப்பட்டது. இதுவே "வள்ளுவனர் வைப்பெமக்கு வாய்த்து" என்று பொய்யாமொழிப்புலவர் பெறலரும்பேறுய்ப் பெற்றதோர் "வைப்பு"—வள்ளுவனர் வைத்த பொக்கிஷமாம். இது "எலேலோசிங்கன் பொருள்" போல், என்றுங் குறையாது, எத்தாலும் நீங்காது.

விடத்தில் கடற்கரையிலிருந்து நெசவுசாலையிருக்குமிடத்திற்கு புகைவண்டியில் அனுப்பப்பட்டு, நூலாகவும் வஸ்திரமாகவும் செய்யப்பெற்று, போனவழியாகப் பின்னும் நம்முடைய தேசத்திற்கு பல வர்த்தகர்கள் மூலமாய் நமக்குக் கிடைக்கின்றது. இவ்வளவு சுற்றலில் சம்பந்தப்பட்ட வர்த்தகர்கள், தரகுக்காரர்கள், வேலைக்காரர்கள், வண்டிக்காரர்கள் படகு கப்பல்காரர்கள், சுங்கக்காரர்கள் முதலியவர்கள் வஸ்திரத்தின் மூலமாக இலாபமடைகின்றனர்.

பருத்தியைப் பயிரிட்டு நூலாக நூற்றால் அது 'பலமுறை' வஸ்திரமாவதில்லை. இப்படியே சணல், ஆட்டுரோமம், பட்டு, தோல் முதலியவைகளின்வேலை. அவைகளின் கிரயம் முழுவதும் செய்யப்படும் வஸ்திரம் அல்லது பொருளினின்று ஒரேமுறையில், செய்கிறவர்களுக்குச் சேரவேண்டியிருக்கிறது. பருத்தி, சணல், ஆட்டுரோமம், பட்டு முதலியவைகளை வஸ்திரமாக்க வேண்டிய கருவியல்லது யந்திரமோ, பலமுறை அவ்வேலையைச் செய்யுமாகையால், யந்திரத்தின்கிரயம்முழுவதும், அவ்வெந்திரம் ஒருதடவையில் செய்கிற வஸ்திரத்தினின்றுமே பெறப்படுகிறதில்லை. நெசவுயந்திரமொன்றைக் கொண்டு பல வருஷங்களுக்கு நெய்து கொண்டிருக்கலாம். கருவிகளை வருஷா வருஷம் புதிதாகச் சம்பாதிக்கவேண்டியதில்லை. கருவிகள் அல்லது யந்திரங்கள் எவ்வளவு காலத்திற்கு நீடித்து நிற்குமோ அவ்வளவுக்கு அது மேலானதென எண்ணப்படுகிறது. யந்திரங்களைச் செய்கிறவன் அதன் கிரயத்தைச் சிறுகச்சிறுகப் பெற்றுக்கொள்ளலாம். அவன் செய்துவிற்கும் யந்திரம் ஒருவருஷத்தில் கெட்டுப்போகாததாகையால், அதன் கிரயத்தை இத்தனைவருஷங்களில் பெற்றுக்கொள்ளுகிறதென்று உடன்பட்டு அதன் கிரயத்தையடைகின்றான்.

செய்துமுடித்த சாமான்களை வேண்டுமிடத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பதும் ஒரு தொழிலாகக்கருதவேண்டியிருக்கிறது. இங்கிலாந்தில் செய்யப்படும் துணிகளை இங்கே கொண்டுவாராவிட்டால் ஆங்கிலேயருடைய நெசவுத்தொழிலானது பயனற்றதாய்விடும். கப்பல் வேலைக்காரர்கள், ரயில்வண்டி வேலைக்காரர்கள், மாட்டுவண்டிக்காரர்கள், பொதிஎருத்துக் காரர்கள், படகுக் காரர்கள், தலைச்சுமையெடுப்பவர்கள் முதலிய பலவித தொழிலாளிகளுக்கு இவ்வேலையானது ஜீவனத்திற்குக் காரணமாயிருக்கின்றது. தவிர கப்பல், ஓடம், படகு இருப்புப்பாதை, வண்டிகள், பாதைகள், கால்வாய் முதலியவைகளைச் செய்கிறவர்களுக்கும் அவ்வேலையே ஆதாரமாகின்றது.

தானியங்கள் அறுவடை செய்யப்படும் இடத்திற்கும், கைத்தொழில்சாலைகளுக்கும் ஒவ்வொருவனும் போய்த் தனக்கு அவசியமான பொருள்களை வாங்கிக்கொண்டு வருவது சாத்தியமில்லை. ஆகவே அவைகளை வரவழைத்து வைத்துக்கொண்டு யாவருக்கும் உடனே கிடைக்கும்படி விற்பதும் ஒரு தொழிலாக ஏற்படுகிறது. கடையென்பதில்லாத முன்காலத்தில சந்தையென்று ஒருதினம் ஏற்படுத்தி, விற்போரும் வாங்குவோரும் சந்தித்து வந்தனர். இப்பொழுதும் இவ்வழக்கம் நடந்து வருகிறது. பயிரிடுவோர்க்கு வருஷத்தில் சிறிது காலம் அதிக வேலையின்றி யிருக்குமாகையால் சந்தைகளுக்குப்போக சாவகாசமிருக்கலாம். வேலையை நிறுத்தாமல் செய்ய வேண்டிய தொழிலாளிகளுக்கு சந்தைகள் பயன்படுவதில்லை. ஆகையால் ஓரிடத்தில் நிலையாயுள்ள வியாபாரமே விற்போர் வாங்குவோராகிய இருதிறத்தாருக்கும் சௌகரிய மாகையால் பெரியவிடங்களில் கடைகளேற்பட, வர்த்தகம் என்பதும் ஒரு தொழிலாக ஏற்பட்டது.

நம்முடைய தேசத்தில் பலவிடங்களில் நெய்வோர், கருமார், மரத்தச்சர், முதலிய சில தொழிலாளிகள் தாங்கள் செய்யும் சாமான்

களைத் தாங்களே விற்கவேண்டியவர்களா யிருக்கிறார்கள். இவர்கள் தெருத் தெருவாகத் திரியும்நேரத்தில் வீட்டிலிருந்து வேறுவேலையைச் செய்யக் கூடுமாயினும், முதலில்லாமையால், உணவுக்கும் தொழிலுக்கும் வேண்டியதற்கு ஏற்கெனவே செய்த பொருளை விற்றே ஆக வேண்டியிருக்கின்றது. வியாபாரிகளுக்கு விற்பதில் அவர்களுக்கு இலாபம் தள்ளி விற்க வேண்டியிருக்கிறது. அந்த இலாபம் சொற்பமாயினும், அதையும் தாங்க சக்தியற்றவர்களாய்த் தாங்களே சாமான்களை விற்பனைக்குக் கொண்டு வருகிறார்கள்.

தவிர நமது தேசத்தவர்கள் பிரதேசங்களிலிருந்து வரும் துணி முதல் ஊசிவரையிலுள்ள ஒவ்வொரு கைத்தொழில் சாமானையும் அதிக பிரியமாய் வாங்கி உபயோகிப்பதால் நமது தேசக் கைத்தொழில் கெட்டு, கைத்தொழிலாளிகளின் வரும்படி குறைந்து, தினக்கூலியும் சரியாகக் கிடைப்பது அரிதாகித் தவிக்கிறார்கள்.

T. C. வெங்கடரமண அய்யர்.

---

## SOME MILESTONES IN THE PATH OF YOGA,

*Or The Negapatam Yogi and the Yoga-Bhumikas.*

## "நாகப்பட்டணம் யோகி"யும் யோக-பூமிகளும்.

காதலிற்போதம்—"அசரீரிவாக்கு."

"போகவர மீயென்றாய் பொற்பாதம் சேர்வேனென்றாய்
யோக சமாதியிலும் போதநிலை யனுபோகமதிலும்
ஏகமாய் உயிர்நிலை யறிந்துள்ள முடையுமட்டும்
ஏகமாயெனையறிந் துன்னகத்திருத்துவை யிவ்வரமீவை யென்றாய்."

ஸ்ரீ நீலாயதாக்ஷியை நம:



நாகப்பட்டணத்திலே ஸ்ரீ நீலாயதாக்ஷியம்மன் கோயிலிலுள்ள கற்பக விநாயகாது அர்த்தமண்டபத்தில் இன்றைக்குச் சுமார் ஒன்றரைவருஷத்திற்குமுன் ஒரு மௌனயோகி வந்திருந்து சில தினங்களுக்குப்பிறகு காணாமற்போனார். பிறகு அவர் அவ்விடம்தானே வந்து அந்த அர்த்தமண்டபத்தில் தானே நிஷ்டைகூடி சமாதியிலிருந்து வருகிறார். இன்றைக்கும் அவர் அங்கேயிருக்கிறார். ஜனங்கள் அவருக்கிழைத்த வருத்தங்களைப்பற்றிக் கதை கதையாகச் சொல்கிறார்கள். அவர் மௌனியாதலாலும் யோக நிஷ்டையுள்ளவராதலாலும் அவர் அவற்றையெல்லாம் பாராட்டியிருக்க மாட்டார். ஆதலால் நாமும் அதைப் பாராட்டாது விட்டு, இப்படிப்பட்ட சாதுக்களைத் தொந்திரவு செய்து ஹிம்ஸிப்போர் மஹா பாபிகளாவார்களென்றும் பெருந்துன்ப மனுபவிப்பார்களென்றும் மட்டும் சொல்லியெச்சரித்துவிட்டுப் பின்னர் அவருடைய யோகசமாதி நிலையைப்பற்றி விசாரிப்போம்.

இவரைப்பற்றிய விர்த்தாந்தங்களை விசாரித்ததில், இவர் சுமார் 40-வயதுக் குட்பட்டவரென்றும், இவரைப் பெற்றாரிருவரு மின்னுமிருக்கிறார்களென்றும், அவர்களுடைய பூர்வஸ்தலம் வேதாரண்யத்துக் கடுத்த கருப்பம்பலம் என்னும் கிராமமென்றும் சொல்லக்கேட்டோம். இதனுண்மை யெப்படியாயினும் இவருடைய யோகநிலையை விசாரித்தறிய இவை

தற்காலம் அத்யாவசிய மானவையல்லவால், இதைவிட்டு, இவருடைய தீக்ஷாகாலத்தைப் பற்றி நாம் விசாரித்தறிந்ததைச் சொல்வோம்.

* * *

### சாதகர் நிலையுணர்த்தல்.

எத்தனையோ பேர்கள் ஆயிரக்கணக்காய் அவர்களது பிறப்பு வளர்ப்பு, ஊர் பேர், குலங் கோத்திரம் எல்லாவற்றையுந் தியாகஞ்செய்து விட்டு நல்வழிபற்றி உய்வான் சமயதீக்ஷைகளும், யோகதீக்ஷைகளும், ஞானதீக்ஷைகளும் பெற்று, உலகத்தை விட்டொழித்து அப்பியாசயோகம் செய்து கடைத்தேறவேண்டி இப்புண்ய பூமியிற் பிறந்ததற்குப் பலனுப் தெய்வத்தை நேரில் அறிந்து அத்தேவனோடொன்றுபட்டுய்ய வுழைத்து வருகிறார்கள். அப்படிப்பட்ட அநாமதேயர்களில் இவர் ஒருவர். இவர் தீக்ஷாகாலத்தில் இருமுறை காசிக்குப் போய்வந்ததாகவும், பின்னர் இரண்டு வருஷகாலம் "திருப்பெருந்துறையுறை சிவ"னெதிரே, மௌனவிருதம் பூண்டு, மாணிக்கவாசகருக்குக் குருமூர்த்தமாய் வந்ததுபோல், தன்னையும் தடுத்தாண்டு ஈடேற்ற வேண்டுமென்று, ஸதா சிந்தையில் அவர் திருவருளைத் தியானித்து "எனக்கு மோர்வழி சொன்னாலன்றி நின் ஸந்நிதி விட்டகலே" னென்று கிடந்தாரெனத் தெரிகிறது.

'பதியிந்த நிலை'யெனவு மெனையாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமானந்த
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூர் இந்தக்
கதியின்றி யுறங்கேன் மேற்கருமம் பாரேன்"

என்ற மஹாதீரரைப்போல், இவரும் 'கோடிநும் பேதையும் கொண்டது விடாதெனும்,' தர்மம்பற்றி லக்ஷியத்தைப்பிடித்த பிடி நழுவாமல் தானே *மூன்றும் பூமியில் தபஸிருந்து மௌனியாய் யோகநிஷ்டை செய்து வந்தார்.

"பேரெடுத்தேன் பெருந் தபஸ்வியென்றே
ஊரெடுத்தே யுருத்தான் ஜபித்தேன்
பேரெடுத்து ரெடுத்தல் கெடுத்தேன் †
பேரிலா ஸ்ரீகுரு நாமங் காணேன்."

திருப்பெருந்துறையிருந்து இவர் இறைவனுக்கிணைப்படி திருவாரூர் சென்று தியாகராஜரை வணங்கி 'வழி யீதென்ன' வென்று கேட்டு நிற்கவும், அவர் திருவருளிருந்தவாறென்னே! யென் றதிசயிக்கும்படி, அங்குள சிலர் இவரை வேஷதாரி யென்றும் கபட நாடகனென்றும் தம் துஷ்டப்புத்திகொண்டு இவரையுமதித்து இவரைப் பேசும்படி சூடிட்டு விட்டாரென்று சொல்கிறார்கள். இது எப்படியாயினும் இவர் திருமேனியில் சூடிட்ட வடுக்கள் இன்னுமிருக்கின்றன.

* * *

### சூடிட்டாட்கொண்ட சூக்ஷ்மம்.

"ஆள்வாரற்ற மாடாய்த்திரிந்த அறிவிலி" யென்று தியாகராஜர் தம் திருக்கோயில் கொண்டானைப் பிடித்துச் "சித்தமெனுந் திண்கயிற்றாற்" கட்டுவித்து கோயிற்காளைக்குச் சூடு போட்டு விடுவதுபோல், இவரைச் சுட்ட வடு விளங்கச் சூடிட்டு இவர் மௌனத்தைப் பரிசோதித்து "இனிப்போய்ச் சும்மாக்கிட" வென்று கட்டளை யிட்டனுப்பினர் போலும் தம் மூரைவிட்டு வெருட்டி விட்டார். "சூடுண்டமாடு நாடெங்குந் திரியினு மதற்குக் கேடொன்றும் வாராது" என்பது இப்புண்யபூமியில் கோயில் மாடுகளின் அனுபவமல்லவா?

அப்படியே இவரும் கெட்டலைந்து படாத பாடெல்லாம் பட்டுத்தேறி மவுனபங்கம் வாராமற்றானே, நீலாயதாக்ஷியம்மையடுத்து அகங்குழைந்து முகம்வாடிநிற்க, அவள் இந்த

* 3-வது யோகபூமியென்று யோகசாஸ்திரங்கள் சொல்லும் தனுமாநஸீ—லக்ஷியம் ஒன்றிலேயே ஏகாக்ரசித்தமாய்ப் படிந்த சூக்ஷ்மமனதினாலாகும் நித்திதியாஸனம் மூன்றாவதுபூமி.

† (சுபேச்சை, விசாரணை, தனுமானஸி என்னும்) முதல் மூன்று பூமியும் தாண்டின சாதகருக்கும் "ஸ்ரீகுரு" தரிசனம் துர்லபமாமென்பது கூறப்பட்டது.

யோகிக்குத் திருவுருத் தெரிசனங்காட்டி "ஸ்ரீகுரு"வாய் வந்து "மூத்த பிள்ளையார் வாசலிற் சென்று மூச்சடங்கக்கிட" வென்று கூறி மறைந்தனள் போலும், அறிவுருவதனில் திருவுருத் தெரிசனம் தானேகண்டு, கற்பகவிநாயகரது அர்த்தமண்டபத்திற் போய் நிஷ்டைகூடி சமாதி சேர்ந்தார்.

கலியின் கொடுமை யாரைவிட்டது! இவர் தேஹப்பற்றை விட்டொழித்துத் தேஹியையே சதமென்று நம்பி அத்தேஹியே தானுய் ஆகுவான் கடுந்தடவியற்றிக் காமத்தைத் தஹிக்க முயன்று வந்தாரேனும், அறிவிலி மாக்தர்கள் அவர்தனை யடுத்துத் தம் "தேஹோஹ பாவனு சித்தியை" அவர் மேலேற்றி, அவரைத் தொட்டும், தடவியும் நமஸ்கரித்துத் தாம் கொணர்ந்த சிற்றுண்டிகளை யூட்டுவான் அவரைக் கஷ்டப்படுத்தியும் பலவாறு ஹிம்ஸைகள் புரிய, அவர் மிக வருந்திப்போனுர். சூடுண்டபோதும் வாய்திறவா மௌனியாம் தீரர் அடியுண்டபோதவர் 'நிஷ்டைகுலைவரோ! இவர்களுடைய ஹிம்ஸைகளை யெல்லாம் கடந்துபோவான் அவர் ஆழ்ந்த சமாதியிலிருக்க, "அவர் ஓர் மஹான்" என்றுணர்ந்த அவ்வூரிலுள்ள மதிராஸ்பாங்கி ஸ்ரீவேலாயுதம் பிள்ளையவர்கள், அம்மண்டபத்தைச் சுற்றிக் கிராதிகள் போட்டுத் திக்பந்தனம் செய்து, அவருக்கு வேண்டிய உணவை அவரெப்பொழுது கண்விழிப்பாரோ அச்சமயமறிந்து குழந்தைக்குத் தாய் பாலூட்டுமாறுபோல் உள்ளங்குழைந்து உள்ளன்பு மிகுதியால் அவரிஷ்டமறிந்து சிறிது நீராகாரம் கொடுக்கும்படியான ஏற்பாடு செய்து பெரும்புண்யம் கட்டிக்கொண்டாரென்று அறிகிறோம். இப்படிப்பட்ட தர்மசிலர்கள் சிலர் இன்னும் இப்பூமியில் இருப்பதினுல்தான், அபூர்வமாயேனும் மழைபொழிகிறது. இல்லாவிடில் வான்வறண்டுபோ மென்பதிற் சந்தேகமில்லை!

## யோகசித்தரான மஹான்களை வழிபடுமுறையுணர்த்தல்.

தஞ்சையிலுள்ள சாமந்தாங்குளக்கரையில் ஒரு அவதூத சித்தர் பெரியவராயிருந்தார். அவர் யோகசித்திபெற்ற மஹான். மௌனியாயினும் சித்திவிளையாட்டிற் பிரியர். காரியத்திற் பசு, காரணத்திற் சூரர். அவரையொரு பிராமணவாலிபர் அடுத்து ஏதோ 'வாதசித்தி' பெற வேண்டிக் காத்திருந்தார். ஸ்வாமிகள் அவதூத சித்தர் என்று சொன்னேம். அஹத்திலன்றிப் புறத்திலுமப்படியேயிருப்பர். தஞ்சாவூர் ராஜவீதியில் இவர் பிறந்தமேனியாய்ப் போகப் போலீஸார் பிடித்து மாஜிஸ்திரேட் முன் கொண்டுபோய் சட்டப்படி இவர் மானங்கெட்டு வெளியில்வந்தவரென்று குற்றஞ்சாட்டினுர்கள். சித்தர் சும்மாவிருந்தார். அவரதுண்மையறிந்த ஒருவர், அவரது மஹிமையைக்கூற, மாஜிஸ்திரேட்டு என்கடமையை யான்நிறைவேற்றுகிறேனென்று ஐந்துரூபாய் அவருக்கு அபராதம்போட்டார். உடனே சிலர்கூடி அபராதத்தைச்செலுத்திவிட்டு அவரை யழைத்துச் சென்றுர்கள். ஆனுல் அவதூதசித்தர் தன் நியமம் தவறினுரில்லை. பின்னரும் அவர் நிர்வாணமாகவேயிருப்பர். சந்துகளில்போனுல் அவரை யொருவரும தடுப்பதில்லை. ராஜவீதியில் அவர் நடக்கப்புகுந்தால், "ஐயோ! போலீஸார் பிடித்துக்கொள்வார்களே" யென்று அந்தப்பிராமண வாலிபர் தனது மேலுத்திரீயத்தை யெடுத்து அவர் அரையில் சுற்றிக்கட்டுவார். அதற்குப் பலனுக அவதூத சித்தர் அவரை முதுகில் பளீர் பளீரென்று அறைவார். அவ்வாலிபரும் அடிபொறுக்க மாட்டாமல் பாவம்! முதுகை நெளித்துக்கொண்டு, அவர் அம்மணத்தை மூடாது கூடவேபோவார். இவர் மஹானென்று தெரிந்துகொண்ட சில "பணத்தாற்பெரியமனுஷ்யர்கள்" பாலும் பழமும் கொண்டு அவரைத் தரிசிக்கப்போய் ஸ்வாமிகள் அவர் கொண்டுவந்ததைப் புசிக்கவேண்டுமென்று பார்த்தார்கள். மரியாதையாய் தூரவி

ருந்து பார்த்துக்கொண்டிருக்குமட்டும், அவதூதர் அவரைக் கண்திரும்பியும் பாராது சும்மாவிருப்பர். கிட்டச்சென்று அவரைத் தொட்டு அலட்டி யூட்டப்போனல் பளீரென்று கன்னத்தில் கொடுப்பார். இவர் இப்படிச்செய்வதறிந்து போலிபக்தர்கள் அடிபடப் பொருதவராய் அவரையண்டித் தொந்திரவு செய்வதை விட்டுவிட்டார்கள். உண்மைப் பக்தர்கள்போனல் உள்ள மறிந்தவர் உண்மையறிந்து பக்குவ புருஷர்க்குப் பரிந்தனுக்ரஹிப்பர். அபக்குவர் தம்மை அலக்ஷியமாய் விடுவர்.

இவரைப்பற்றி நாம் கேள்விப்பட்டதுபோக வழியிலோ ரிடையூறுற்றுக் கடைப்பிடி ரகஸியம் கண்டுங் காணுது தவித்தமோர் அவசரத்திலென்க.

அம்மஹானைத் தியானித்து "நீர் சித்த புருஷரானதாலென் சித்தங்குடிகொண்டு சித்துருவான நிர்விகல்பந்தனில் நிலைக்கவே யருளவேண்டும்" என்று ஐம்பொறி யடக்கிக் காமங் களைந்து நிஷ்டைகூடிச் சவிகல்பந்தாண்டி நிர்விகல்பஞ் செல்லு மவசரந்தன்னில் ஆருயிர்துடிக்க அங்கம் பொடிபட அயர்ந்தேபோனேம். அதுவே தருணமென்றச் சித்தபுருஷர்தாமும் சித்துருக்கொண்டு சத்துடன் கலந்து எழில்நிறையம்பலத் "தவதாரபுருஷராய்ச்" "சிற்றம்பல" வாசலிற் சிறப்புடன் எதிர்க்கொண்டு, அம்பல வாயிலின் அடைப்பதைக் காட்டி, துவம்பத லக்ஷியத்தைத் துவம்ஸம் பண்ணியே, "பலியிது கொடுத்தேன் திறவினி வாசல்!" என்றுமே யவரும் சொல்லாமற் சொல்ல, அம்பலக் கதவும் அடிபடத் திறந்தது!

முன்வழி காட்டப் பின்வழி சென்றனன்.

உள்ளே போன பின் உடனிருந்த யோகியை உற்றுப்பார்த்தனன்! தத்பத துவம்பத மிரண்டும் ஒன்றும் அசிபதந் தன்னில் அடைந்தது கண்டேன்.

கண்டேன் கண்டதை விண்டில னுனேன்:
விண்டதீ தெல்லாம் வியர்த்தமே யாமால்,
உண்டதொன் றுண்டு, உண்மையுமதுவே!
"கண்ணு லுறப்பார்த்துக் காதலாற் றுனேக்கில்
உண் ணுமே யீச னெளி" யென்றதின்—
உண்மையை யுணர்ந்தா ருணர்வார், உணரார்
உணர்விலாதார்.

"கரையற்ற செல்வத்தைக் காணுங் காலத்தில்
உரையற் றிருப்பது உணர்வு"—ஆதலால்,
"உண்டுபசி தீர்ந்தாற் போலுடம் பெல்லாஅங்
கண்டுகொள் காதல் மிகும்."—
என்றுதான் சொல்லலாம். மேற்சொல்ல வாயில்லை! நினைக்க மனமும் இல்லை!

ஒருவருஷங்கழித்து அருவிற்கண்ட அந்த மஹானை உருவிலுருவா யிருப்பதைப் † பார்க்கப்போனேன். பனிநீர் மலர்கொண் டவர் பொற்பாதம் பூசித்துத் தனிநின்றேனைக் கண்டு "நீ யார்?" என்றர். "உரைகெட வுன்னைக் கண்டவன்தானே திரைகெடப் பின்னும் தெரிசிக்க வந்தனன்" என்று, உள்ளத்தே யுன்னியதை வாயால் உளறச் சித்தரும் உடனே மௌனியானர். "சாகாதிருந்த தலமே மௌனமதால்,' மௌன தெரிசினமளிப்பான் அருவுருக்காட்டி யுருவருவழித்த உத்தமபுருஷராய் அகண்டதெரிசனம் அகமகிழ்ந்து தந்தனர்: அவரிற் பிறிதேதுங் காணேன்.

* * *

"மகான்கள் நல்லபாம்புக்கு ஸமானம்."

இது மஹான்களையண்டி அருள்பெறும் வழியாம். அதைவிட்டு அவர் தேஹத்தைத்தொட்டு அவர் தபஸைக்கலைத்துத் தம்மழுக்குறு சிந்தையை அவர் அழுக்கறு தபஸில் சேர்த்தால், அது அவருக்குப் பெருங்கஷ்டமாயிருக்கும்.

† ஸ்தூல வடிவில் திருமேனி கொண்டிருப்பதை என்றபடி.

அவர் துன்பம் பொறுக்காது "ஆ, கெடுவாய்!" என்று நினைத்தால் கெடுதி வந்தவரைச் சூழ்ந்தே கொள்ளும். ஆகையால் தபஸ்விகளிடம் பாம்போடு பழகுவது போலப் பழகல்வேண்டும்! தூரநின்று "சுப்பிரமண்யா!" என்று கும்பிடலாமே யன்றி, கிட்டப்போய் அதன் வாலைப்பிடித்து வாயைத்திறந்து பாலைக்குடியென்றாலது வெடுக்கென்று கடிக்கும். தாபஸாக்னி ஆலகால விஷத்திலுங் கொடியது. "அங்கியிற் பஞ்சுபோல்" அது சித்த மாங்கார மெல்லாவற்றையும் எரித்து பஸ்மமாக்கும். ஆகையால் தபஸ்விகளைக் குழந்தை போல் தாயன்பால் பூசனைசெய்யப் பக்குவமிலாதார் பாம்புபோற்பயந்து பாலைவார்த்துவிட்டு தூரநின்று தரிசிப்பது முறையாம். முட்டுத் துணிச்சலைக் குருட்டுத்தனமாய் தபஸ்விகளிடம் காட்டுதல் கேடுபயப்பதாம்.

சாதகரான அப்பியாஸயோகிகள் நிலைகலங்கி உயிர் துடிப்பார்கள். சாத்தியரான யோகசித்தர்கள் நிஷ்டைகுலைந்தால் தஹித்தே விடுவார்.

*  *  *

"சேத்தாலன்றிச் † சுடுகாடறியார்."

'நாகபட்டணம் யோகி' ஒரு வருஷமாய் இப்படி செத்தபிணம் போல் நிஷ்டையிலிருக்கிறாரே, ஈதென்ன தபமென்று உலகஞானிகள் ஏளனம் கூறுவார்கள். இவர்கள் தம்மனத்தை யடக்கிப் பார்த்தால் அப்பொழுதுதெரியும் அதன் வருத்தம்! "செத்தாலன்றிச் சுடுகாடறியார்!" சுஷும்னா என்னும் சுழிமுனை மலத்தைச்சுத்திகரிக்கும் தலமாதலால் சுடுகாடு, ஸ்மசானம் என்கிற சிறப்புப்பெயர் பெற்றுள்ளது. அதுவும் காமத்தைக் களையவேண்டில் அது தேஹமெல்லாம் ஜல்லிவேரோடிக்கிடப்பதும், அதைக் களையும்போது தேஹமே யிடிந்து விழுந்து போம் போலிருப்பதும் தானகத் தெரியவரும்.

‡ சுடுகாடு அல்லது ஸ்மசானம் என்பது சுழிமுனையின் யோகசங்கேத நாமங்களில் ஒன்று.

காமத்தைக் களைவானேனெனில்?

"இந்தக்காமம் தானே ஞானிக்கு நித்திய சத்துருவாயிருக்கிறது." (பகவத்கீதை iii. 39.)

"இந்தக் காமம் மனோபுத்திகளால் ஞானத்தையும் மறைத்துப் புருஷனையும் மோஹிக்கச் செய்கிறது." (பகவத்கீதை iii. 40.)

இந்தக் காமம் எல்லாவற்றிற்கும் ஆவரணமாய் மூடிக்கொண்டிருப்பதால், இதுவே வருணசப்தத்தால் விளங்கும்: மேகத்துக்கும் மயிலுக்கு முள்ள ராசி இதனால் விளங்கும்.

"ஆதலில், அர்ச்சுனா நீ இந்திரிய நிக்ரஹத்தை முதலிற்செய்து, ஆத்ம ஞானத்தையும் அநுபவ ஞானத்தையும் நசிக்கச் செய்கின்ற காமத்தைப் பாவியென்றுணர்ந்து நீங்கியிருப்பாயாக."— என்று பகவான் கீதையிற் போதித்திருக்கிறார். இந்த காமத்தைக் களைய முதலில் "இந்திரிய நிக்ரகம்" சாதனமாகச் சொல்லியிருக்கிறார். இந்திரியநிக்ரகம் செய்தவர்களுக்கு வாசிவசப்படும். வாசிவசம் பூரணமாய் சித்தித்தால் மனம் வசப்படும். மனம் வசப்பட்டால், சங்கல்பவிகல்பமான அதன் காரியங்கள் வசப்படும். நினைப்பும் மறப்பும், புத்தியை தாம் போனவழியில் இழுத்துக்கொண்டு செல்லாது புத்தியின் வசப்பட்டுநிற்கும். "ஆள்வாரற்ற மாடாய்த்திரிந்த மனம்" சூடுண்ட கோயில்மாடுபோல் தன் ஸ்வதந்திரங்கெடாமல் "சத்துவாபத்தி"யால் ஆத்மபுத்தியின் வசத்ததாய் கட்டுக்குட்பட்டதாகும். மனோவசத்தால் புத்தி வசப்படும். புத்தி வசப்பட்டால், நிதானம் உண்டாகி "திரையற்ற நீர்போல் சிந்தைதெளியும்". இதனால் ஆத்மதரிசன முண்டாகும்.

*  *

காயத்தைக் கட்டுமுறை—விவேகசிந்தாமணி.

சின்னதைப் பெரிதால் கட்டவேண்டுமேயன்றி, தன்னினத்தைக் கொண்டெதிர்த்தால் சிதைவுறும். தேஹத்தைக்காட்டிலும் இந்திரி

யங்கள் சிறந்தனவாகையால், இந்திரியங்களை க்கட்ட தேஹம் கட்டுப்படும். ஆனால், மனதை க்கொண்டே இந்திரியங்களை நிக்ரகிக்கவேண்டும். மனதைக்காட்டிலும் புத்தி சிறந்ததால் விவேகபுத்தியால் தானே மனதைக் கட்டல் வேண்டும். புத்தியைவிட ஆத்மா சிறந்ததாகையால், ஆத்மதரிசனம் உண்டானாலே விவேக-சிந்தாமணி-புத்தி சித்திக்கும். ஆத்துமதரிசனமேகுருவருள். "விவேகாநந்தம்' என்பதும் இதுவே. † ஆத்மாவும் குருவுமொன்றாதலால் குருதரிசனத்தாலேயே ஆத்மதரிசனம் சித்திக்கவேண்டும்.

"குருதரிசனம்" தெய்வானுக்ரகத்தாலும், அந்த அனுக்ரகம், பரசேவையாலும், பரசேவை கர்மபலனையிச்சிக்காமலும் ஈசுவரார்ப்பணமாகவும் ஸத்கர்மத்தையும் ஸ்வதர்மத்தையும் செய்வதாலும் உண்டாவதாயிருப்பதால், கர்மயோகத்தை உபதேசித்துவந்த பகவான் கடைசியில்,—

"அர்ச்சுனா! இவ்வண்ணமாகப் புத்தியைக் காட்டிலுஞ் சிறந்த ஆத்மாவை நன்றாக வுணர்ந்துகொண்டு புத்தியால் மனத்தை நிக்கிரகித்துத் துக்கோற்பத்திக்குக் காரணமான காமத்தை யொழிப்பாயாக."—

என்று வற்புறுத்திக் கூறலானார். இந்த உபதேசத்தை மேற்கொண்டு காமத்தை யொழிக்கச் செய்யுந் தபஸே தேஹத்தைச் சின்னபின்னப்படுத்தி மரணத்தையும் சிலசமய முண்டுபண்ணிவிடும். ஆகையால்தான் காயஸித்திபெற்ற யோகிகளும் குருதரிசனத்துக்குக் காத்திருந்து குருவருளினாலே காமத்தைக்களையும்பொழுது, தேகமாத்யந்தம் ஜல்லிவேரோடிப்படர்ந்த அந்தக் காமம் களையப்படும்பொழுது

† "(விவேக) சிந்தாமணியானது குரு ஒருவரேயன்றி மற்ற வேதாந்த தர்க்கவசனங்களாலும், ஆகமங்களாலும், நானாவித சாஸ்திரக் கூட்டங்களாலும், தியானமுதலிய நற்செய்கைகளாலும், அறியத்தக்கதன்று." என்று இராஜயோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது

தேஹத்தைச் சின்னபின்னப் படுத்திவிடும்: அதனால் தேஹம் விழுந்து போகாதபடி, தேஹத்தை இந்திரியங்களிலும், இந்திரியங்களை மனத்திலும், மனத்தைப் புத்தியிலும் புத்தியை அறிவெனும் ஆத்மாவிலுமாக லயக்கிரமமாக வொடுங்க வொடுக்கிக் காமத்தை வேரோடு களையவேண்டும். அப்பொழுது லயயோக சித்தியினால் காமத்தைக் கண்டவன் ஹடயோகசித்தியாம் கேவல-கும்பகத்தினால் மிருத்யுவை (மரணத்தை) ஜயித்தவனாகி பிராணனை தேஹம்உயிரோடிருக்கவும் அதனின்று பிரித்துக்கொள்ளும் அதிரகஸியமான "ராஜகுப்த" வித்யையினால், தேஹம் விழுந்து போகாமல் தானே காமத்தை வேரோடு களைந்து அதனால் தேஹமெல்லாம் கட்டுவிட்டுக் கலந்து சேரப்பெற்று, விவேகத்தோடு கூடிய காமவிவர்ஜிதமான மனதினால், நிஷ்காமியசித்தி பெற்ற யோகியானவன் "தேஹோ தேவாலயப் ரோக்த: ஸஜீவக்கேவல:சிவ:" என்ற சுருதிவாக்கிற்சொல்லிய தேவாலயமாக, தேஹத்தை இடித்துக்கட்டுகிறான். இதற்குத் தான் "Resurrection" "செத்துப் பிழைத்தல்" என்று சொல்கிறது. இப்படிச் செத்துச் சுண்ணம்பாகிப் பின்னும் தேஹத்தைச் சுத்தமாக நிர்மித்துக் கொண்டிருக்கும் யோகியின் தபஸை கலைக்கலாமா? அது மஹாபாபமல்லவா!

* * *

"ஹடயோகசித்தி"—ராஜயோகசாதனம்.

லயயோகசித்தி பெற்றவனான யோகி தத்துவதரிசியாவன். பின்னர் ஹடயோகத்தால் பிராணயாம சித்திபெற்று, காமத்தைக்களையவேண்டுமென்கிற ஹடாத்காரமான லக்ஷியத்தால், பிடிவாத சித்தத்துடனே ஜல்லிவேர்பாய்ந்த காமத்தைத் தத்துவம் தொண்ணூற்றாறும் பிரியப் பிடுங்கி யெறிந்து யோகதற்பரனாய் நாதாந்தத்தி லிருந்துகொண்டு பின்னும் தன் தேஹத்தைக்"கட்டுவிட்டுக் கலந்து சேர"க்கட்டி முடித்

துக் கேவலகும்பகம் என்னும் பிராணுயாம சித்தியால் கும்பாபிஷேகம் செய்து யோகத்துக்கெல்லாம் ராஜாவான அத்யாத்மயோகத்தால் ராஜயோகி யென்கிற பேரெடுத்து ஜகத்ப்ரசித்தனுப் விளங்குவான்.

கர்மயோகத்தின் முடிவு காமத்தைக் களைதலால், காமத்தைக் களைந்தபின் காயசித்தி தானே வந்து லபிக்கும். மந்திரம், கற்பம் முதலியவற்ருல் ஆகும் காயசித்தி சாதனமாத்திரமேயன்றி உண்மைச் சித்தியளிக்காது. உண்மையான காயசித்தி காமத்தைக் களைந்தபின் சித்திப்பதே யாதலாலும், அந்தக்காமமும் ஆத்மதரிசனத்தாலுண்டான அபரோக்ஷ அகண்டஞான விருத்தியாலன்றி களையப்படுதலில்லையாலும், முத்தி சித்திபெற்றவர்கள் விதேஹ கைவல்யார்த்தம், தேஹத்தை ஆத்மஞானத்துக் கனுகூலமாகச் செய்து கொண்டிருப்பதே "காயசித்தி" என்னும் வாக்கியார்த்தத்துக்கு லக்ஷியமாம். மற்றவையெல்லாம் சாதன மாத்திரமாய் அப்பியாஸத்துக்கு மட்டும் யோக்கியமாயிருந்துதவும்.

ஓம்தத்ஸத்.

---

## Sivayoga-Deepika.
## Chapter III.
### (First Part, Ashtavadhana Siddhi.)

ஓம் ஸ்ரீ சாவித்திரியை நமஃ

### சிவயோக தீபிகையில்
### அஷ்டாங்க பூஜா அந்தரங்க சதுரங்க விதானமென்ற
### மூன்ருவது படலம்.

---

(முதற்பாகம், அஷ்டாவதான சித்தி.)

1. இந்தப்பிரகாரம் யமம் முதலிய பாஹிய சதுரங்க விதானமானது அழகிய வாக்கியங்களால் மேற் சொல்லப்பட்டது. இனிமேல் ஓ சிஷ்யனே அந்தரங்க சதுரங்கவிதானத்தைச் சொல்லுகின்ருேம்: சிவத்தினிடத்தில் அற்பிதமான மனத்தோடு கூடினவனுய் கேட்பாயாக.

2. அதெப்படி யென்ருல் சுத்தமனமாகிற சாணைக்கல்லில் சுரோத்திரம் முதலிய இந்திரியங்களால் அரைக்கப்பட்டு பிறந்த விஷயங்களாகிற நிர்மலகந்தத்தை குரு சதாசிவலிங்கத்துக்குச் சமர்ப்பிக்கவும்.

3. எவ்விதம் ஆமையானது தன்னுடைய அங்கங்களை தன்னிடம் அடக்கிக் கொள்ளுமோ, அவ்விதம் சகல இந்திரியங்களையும் தன்னுள்ளடக்கிக் கொண்டு யோகிசுவரனானவன் நியமம் தப்பாமல் சிவத்தியானம் செய்ய வேண்டும். அவ்வித யோகிசுவரன் பரமதத்வ ஞானி என்று எண்ணப்படுவன்.

பிரத்தியாஹாரம்.

4. அநேகவித வர்ணங்களோடு கூடிய ஆதாரம் முதலிய கமலங்களில் அவைகளின் மத்தியில் பிரகாசிக்கும் அநேக விதமான சகுண நிர்க்குண பாவங்களாகிற புஷ்பங்களால் இரவும் பகலும் ஸ்ரீலிங்க மூர்த்தியை ஹிருதய கமலத்தில் விடாமல் பூஜிக்கவும்.

5. ஆதாராதி கமலங் களாவன:—ஆதாரம் (என்னும் மூலம்), லிங்கம் (என்னும் ஸ்வாதிஷ்டானம்), மணிபூரகம், ஹிருதயம் (என்ற அனுஹதம்), விசுத்தி, புருவமத்தியம் (என்கிற ஆக்ஞை), ஆகாசரந்திரம் (என்னும் ஸஹஸ்ர கமலமும்), ஆகிய ஏழும் யோகிசுவரர்களுக்கு சுகத்தைக் கொடுக்கும்படியான மகா விசித்திரமுள்ள தியான ஸ்தலங்களென்று சொல்லப்படும்.

6. மனதை அந்தர்முகமாகச் செய்து திருஷ்டியை பாஹியத்தில் நிறுத்தி இஷ்டமான ஆசனத்தில் தேகம் வளையாமல் இருந்து கொண்டு ஹிருதய கமலத்தில் இடைவிடாமல் அசைவற்றதும் சாந்தமானதும் அத்வைதரூபமானதும் தனது ஆத்ம ரூபமுமான சிவத்தை தியானம் செய்வாயாக. அப்படிச் செய்வாயாகில் நீ சத்யோமுக்தனுவாய்.

7. சகல தியானஸ்தலங்களுள் நவசக்கரங்களும் சிரேஷ்டமானதாய் யோகிகளால் சொல்லப்படும். அவைகளை நாம் சொல்லுகிறோம் கேள்.

8. மூலாதாரத்தில் மூன்று சுற்றுள்ள பகாகாரமான (திரிகோணரூபமான) பிரஹ்ம சக்கரம் இருக்கின்றது. அதின் மத்தியில் அக்கினி பிரகாசமாய் சகல அபீஷ்டங்களையும் கொடுக்கும் ஆதிசக்தியை* தியானம் செய்யவும்.

9. அதற்குமேல் சுவாதிஷ்டான கமலம் நாலு இதழ்களுடன் இருக்கும். அதுவே உட்டியாணபந்த ஸ்தலம். அவ்விடத்தில் மேற்கு முகமாய் இருக்கும் சிவத்தை தியானம் செய்யவும்.

10. இதற்குமேல் நாபி ஸ்தானத்தில் ஐந்து சுற்றுள்ள மணிபூரக சக்கரம் இருக்கும். அதில் பாம்பு ரூபமாய் மின்னற்கொடிபோல் பிரகாசிக்கும் முக்தியைக்கொடுப்பதான குண்டலினீ என்னும் "மத்யகுண்டலினீ சக்தியை" தியானம் செய்யவேண்டும்.

11. அதற்குமேல் ஹிருதயஸ்தானத்தில் எட்டு இதழ்களுடன் கூடிய அதோமுகமான அனுஹதசக்கரம் இருக்கும். அதன் கர்ணிகையின் மத்தியில் ஜோதிர்லிங்காகாரமான இஷ்டபிரதசக்தியை தியானம் செய்யவேணும்.

12. அதற்குமேல் கண்டஸ்தானத்தில் ஐந்தாவதான (விசுத்தி) சக்கரமிருக்கும். அதில் நாலாம் அங்குலத்தில் இடைக்கும் பிங்களைக்கும் மத்தியஸ்தலத்தில் சுஷும்ன சக்தியை ஸ்திரமாயிருப்பதாய் தியானம் செய்யவும்.

13. அதற்குமேல் ஆறுவதான கண்டிகாலிங்க மூலசக்கரம் உண்டு. அதுவே ராஜதந்தகமென்று சொல்லப்படும். அதற்குமேல் அதனுடைய துவாரத்தை சித்தியின் பொருட்டு சூன்யமாக தியானிக்கவும்.

14. அதற்குமேல் ஏழாவதான ப்ரு (புருவ)* சக்கரமுண்டு. அதுவே ஏகநாளமென்றும் கந்தஸ்தானமென்றும், வாக்பிரதம் என்றும் சொல்லப்படும். அதன் மத்தியில் ஞானலாஞ்சனமான தீபசிகாகாரத்தை தியானம் செய்யவும். [லாஞ்சனம்=அடையாளம்.]

15. அதற்குமேல் எட்டாவதான பிரஹ்மரந்திரத்தில் நிர்வாணம் என்று சொல்லப்படும் மிகச்சூக்ஷ்மமான சக்கரம் இருக்கும். அவ்விடத்தில் மோக்ஷத்தைக் கொடுப்பதும் தூமசிகாரூப[மாயிருப்பதுமான] ஜாலந்தரத்தை தியானம் செய்யவும்.

16. அதற்குமேல் ஒன்பதாவதான ஆகாச சக்கரம் பிரகாசிக்கும். அது "த்ரிகூடம்" என்றும், பூர்ணகிரிபீடம் என்றும் சொல்லப்படும். அது பதினாறு தளங்களுடன்கூடின கமலமாய் இருக்கும். அதில் சகல சுகத்தையும் கொடுக்கும் சூன்ய ஊர்த்துவசக்தியை † தியானம் செய்யவும்.

* ["மூலத்தி" யென்னும் "ஆதார குண்டலினீ" யாகிய அதோமுகசக்தி மூலத்திரிகோண மத்தியில் அக்கினிப் பிரகாசரூபமாய் இருக்கிறது.—வி. சி. ப.]

* சம்ஸ்கிருத ஏட்டுகளிலும் சில மொழிபெயர்ப்பு பிரதிகளிலும் "பூசக்கிரம்" என்று பாடம் காணப்படுகின்றது. அது ப்ருசக்கிரம் என்று இருக்கவேண்டும். ['பூசக்ர'மென்பதே பாடமாயின், அதற்கு ஸ்ரீ சக்ரத்தில் 'பூப்ரஸ்தம்' என்று சொல்லப்படும் புவன மண்டலத்தின் மேல்முனை புருவமத்தி யாதலால், "காரியமேழும் கரைந்திடும் மாயையில்" என்ற திருமந்திரத்தின் லக்ஷியார்த்தத்தைக் கொண்டு, "புருவமத்தி" யென்று கொள்ளல்வேண்டும்.—வி. சி. ப.]

† [இதற்கு ஊர்த்துவகுண்டலினீ யென்றுபெயர், மத்யகுண்டலினீ நாபிஸ்தானத்திலுள்ள மணிபூரக சக்ரத்தில் மின்னல்கொடிபோல் பிரகாசிக்குமென்று 10-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறார். ஆதார குண்டலினி யென்னும் அதோமுகசக்தி அக்னிப் பிரகாசரூபமாய் மூலத்திரிகோண மத்தியிலிருக்குமென்று 8-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறார். —வி. சி. ப.]

17. (ஸ்ரீகுரு மூர்த்தியானவர் சிஷ்யனைப் பார்த்து இந்தப்பிரகாரம் மோக்ஷார்த்தியான யோகீசுவரனானவன் இந்த நவசக்கரஸ்தானங்களை யறிந்து தியானம் பண்ண வேண்டுமென்று சொல்லி) பின்னும் பதினாறு ஆதாரங்களுண்டு: அவைகளை விசேஷமாகச் சொல்கின்றேன் கேள் என்றார். அவைகளென்னவென்றால்:—

முதலாவது, பாதாங்குஷ்டம். அதனிடம் பிரகாசத்தைத் தியானம் செய்தால் பார்வை ஸ்திரப்படும்.

18. இரண்டாவது ஆதாரமாவது, பாதத்தின் குதிகாலின் பின்பாகம். அதைக்கையால் பிடித்து (மனதை அதில்) ஸ்திரப்படுத்தினால் அந்த க்ஷணமே அக்னிதீபன முண்டாகும்.

19. அதற்குமேல் மூன்றாவது குதஸ்தானம். (1)அதை சதாகாலமும் சங்கோசனத்தினாலே ஆகுஞ்சனம் பண்ணினால் அபானவாயு ஸ்திரப்படும்.

20. நாலாமாதாரமாவது லிங்க ஸ்தானம்: அதில் தண்ட சங்கோசனம் பண்ணினால் மனமும் வாயுவும் பிரஹ்ம (கிரந்தி முதலிய) கிரந்திகள் (முடிச்சுகள்) மூன்றையும் பேதித்து (2)வஜ்ஜிரநாடியில் (சுஷு-ம்னையில்) பிரவேசிப்பதால் பிந்துஸ்தம்பனமாகும்.

21. ஐந்தாவது ஆதாரமாவது ஒட்டியான பந்தஸ்தானம். அதனிடம் அடிக்கடி முத்திரையினாலே [மனதை] நிறுத்தினால் சீக்கிரத்தில் மலம் மூத்திர கிருமிகள் நாசமாகும்.(3)

22. ஆறுமாதாரமாவது நாபிஸ்தானம். அதிலே யாதொரு புத்திமானானவன் ஏகாக்கிர சித்தத்தோடு கூடின ஸமாதியினால் பிரணவத்தை ஜபிப்பானானால் அவனுக்கு நாதோதயமாகும்(4) (நாதம் கேட்கும்)

23. ஏழாமாதாரமாவது ஹிருதய ஸ்தானம். அதிலே பிராணவாயுவை நிறுத்தினால் அவனுக்கு க்ஷணத்தில் மத்திமகமலம் விகசிக்கும் (மலரும்).

24. (எட்டாமாதாரமாவது) கண்டஸ்தானம். கண்டத்தின் மூலத்தை சிபுகத்தால்(5) அமுக்கினால் அப்பொழுது இடை பிங்கலை இவைகளில் சஞ்சரிக்கின்ற வாயு ஸ்திரப்படும்.

25. ஒன்பதாவதாதாரமாவது கண்டிகா ஸ்தானம். இதில் நாக்கு நுனியை நிறுத்தினால்(6) திருப்தியை யுண்டு பண்ணுவதான அமிர்தகலை பெருகும்.

26. பத்தாவது ஆதாரமானது தாலுமூல ஸ்தானம். அதன் கர்ப்பகோளத்திலே சாலனம், தோஹனம்(7) இவைகளால் நீட்டப்பெற்ற நாக்குநுனியை விபரீதமாகப் பிரவேசிக்கப்பண்ணினவன் உன்மனீபாவத்தை யடைவான்.

---

(1) ஆதாரமென்பது சம்ஸ்கிருத புஸ்தகங்களின் பாடம்.

(2) "வாமநாடி" யென்று மோர் பாடமுண்டு. [வாமதேவர் மார்க்கமென்று சொல்லும் 'கிரமமுத்தி மார்க்கத்தார் போற்றும் வாலை' யிருக்கும் நாடிக்கு "வாமநாடி" யென்று சித்தர்முறையில் பெயர். "மூலத்துதித்தெழுந்த முக்கோணச் சக்கரத்துள் வாலைதனைப் போற்றாமல் மதிமிழந்தேன் பூரணமே" யென்று பட்டினத்துப் பிள்ளையும் பாடியிருக்கிறார். "மூலநாடி முக்கட்டலகுச்சிபுள், நாலுவாசல் நடுவில் நிற்பீர்காள்" என்ற திருமந்திரோபதேசத்திலும் இது விளங்கும்,—வி. சி. ப.]

(3) தியானம்செய்து, சுவாசத்தை நிறுத்தி, ஓர் மாசம் நிறுத்தி என்பன சம்ஸ்கிருதத்தில் வேறு பாடங்கள்.

(4) நாதலயமாகும் என்பதும் பாடம்,

(5) "நாடியினாலே" என்பது தமிழ்மொழி பெயர்ப்பின் பாடம். 'சிபுக'மென்றால் முகவாய்க் கட்டை (Chin). [நாடிதாரணை சித்திபெற்றவர்கள் அந்த சித்திசாமர்த்தியத்தாலே சிபுகத்தால் அமுக்கப்படும் வாயுவை "நாடியினாலே"யே அமுக்கி ஸ்திரப்படுத்துவார்கள்.—வி. சி. ப.]

(6) நிறுத்தினால், அமுக்கினால் என்பவை தமிழ் மொழிபெயர்ப்பின் பாடங்கள்.

(7) இவைகளைக் குறித்து ஹடயோகப் பிரதீபிகையைப் பார்க்கலாம். [25, 26, 27, 28 இந்த சுலோகங்களில் சொன்ன சித்திகள் 'லம்பிகாயோகம்' என்கிற அப்பியாஸயோகத்தைச் சேர்ந்ததாம்.—வி. சி. ப.]

27. (பதினோராவதாதாரமாவது) ரசனுதாரம் (நாக்கின் அடிபாகம்). அதிலே நாக்கு நுனியை உறையப்பண்ணினவனுக்கு அமிருதபானமும் கவிசெய்யும் திறமையும் நன்றாய்ச் சித்தியாகும்.

28. பனிரெண்டாமாதாரமாவது தந்தஸ்தானம். அதற்கு மேல்பாகம் ராஜதந்தகமெனப் படும். அதில் நாக்கு நுனியை உறையப் பண்ணினல் ஆறுமாதத்தில் உள்ஜோதி காணப்படும்.

29. பதின்மூன்றுவதாதாரம் கிராணமூலம்(8) (மூக்கின்மூலம்). அதனிடம் நித்தியமும் எவன் மனதோடு கூடிய திருஷ்டியை ஸ்திரப்படுத்துவானே அவனுக்கு வாயுஸ்திரப்படும்.

30. பதினலாவதாதாரமாவது லலாடஸ்தானம். அதிலே யோகியானவன் மனதுடன் வாயுவை நிறுத்தினல் சர்வசித்திகளையு மடைவான்.

31. அதற்குமேல் பதினைந்தாமாதாரமாவது ப்ரூ (புருவ) ஸ்தானம். அதற்கு மேலாக சலனமற்ற திருஷ்டியால் எந்த அறிவுடையோன் பார்ப்பானே அவனல் சிக்கிரத்திலேயே கிரணகாரமாக (கிரணங்களைப்போல்) ரூபமானது பார்க்கப்படும்.

32. பதினறுமாதாரமாவது நேத்திர ஸ்தானம். அதற்குமேல் பார்க்கப்பட்ட அறிவுடையோனுக்கு சிக்கிரத்திலேயே கடைக்கண்களில் மனோகரமான ஜோதிக்கூட்டமானது காணப்படும்.

33. (இப்பொழுது சொன்ன முறைப்படி) (1-3) மூன்று பந்தங்கள், (4) ஆசனபந்தனம் (ஆசனங்கூடல்) (5) மந்திரம், (6) நாதசிரவணம் (நாதத்தைக்கேட்டல்), 7) கேவலகும்பகம்), (8) தியானம் இவை யெட்டின் அப்பியாசத்தால் யோகியானவன் சித்தத்தை அஷ்டவிதங்களால் அவதானம் செய்தவெனெனச் சொல்லப்படுவன் (அஷ்டாவதானியெனச் சொல்லப்படுவன்).

(இன்னும் வரும்.)

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

---

(8) பிராணமூலமென்றும் பாடமுண்டு.

## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம் III] [காட்சி-3.

இடம்—உறையூருக்கும் மதுரைக்கும் மத்தியில் உள்ள ஒரு சாலை

காலம்—விடியற் காலம்

பாத்திரர்— கோவலன், கண்ணகி, கௌந்தி, ஓர் அந்தணன்.

கண்ணகி:—நாதா! நாம் நேற்று அந்தத் தோப்பில் தங்கி இளைப்பாறிவிட்டு இன்று காலையில் புறப்பட்டது மிகவும் நலமல்லவா? அங்கு தங்கினதால் களைதீர்ந்து ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் இன்று வழிநடந்து செல்லச் சாத்தியமாகிறது.

கோவலன்:—ஆமாம்; நீ சொல்வது வாஸ்தவமே. எல்லாம் வல்ல கடவுளே, தாம் இளைப்பாறும் பொருட்டு சங்கார கிருத்தியத்தை நடத்துகிறார் என்றால் கேவலம் குறைகொழுமிய அறிவும், முறை திறம்பிய செயலுமுடைய மக்களாகிய நமக்கு இளைப்பாறுதல் அவசியம் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

கௌந்தி:—கோவலா! நல்ல உதாரணம் எடுத்துக் காட்டினுய்! மெச்சினேன் உனது அறிவை.

கோவலன்:—அடிகாள்! அதோ யாரோ ஒரு அந்தணர் வருகின்றார்! அவரை விசாரித்தால் மதுரைக்குப்போகும் வழி தெரிந்து கொள்ளலாம்! தாங்களும் கண்ணகியும் இந்தப் பூவரசு மரத்தடியில் உட்கார்ந்திருங்கள்! யான் அவரை விசாரித்து மதுரைக்குப் போகும்வழி தெரிந்து வருகிறேன்!

கண்ணகி:—காதலா! நாங்கள் இருவரும் இங்கேயே இருக்கிறோம்! அந்தணர் (அந்தணரைச் சுட்டிக்காட்டி) இதோ நெருங்கி வந்துவிட்டார்! விரைவில் சென்று அவரை விசாரியுங்கள்!

கோவலன்:—(அந்தணரை நெருங்கி) சுவாமி! (இருகையும் கூப்பித்தொழுகிறான்) தாங்கள் யார்? தாங்கள் எங்கிருப்பது? இங்கு வரக்காரண மென்ன? தயைசெய்து கூறும்படி வேண்டுகிறேன்.

**அந்தணர்:**—ஐயா! தமக்கு எல்லா மங்களமும் உண்டாவதாக! (கோவலனை ஆசீர்வதிக்கிறார்) குடகு மலைக்குப் பக்கத்தேயுள்ள **மாங்காடு** என்னும் ஊரில் வசிக்கும் அந்தணன் யான்! பாண்டியனுடைய கொடைத்திறத்தையும், அளித்திறத்தையும் நான் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்! பாண்டிய நகரத்தின் சீரையுஞ் சிறப்பையும் பற்றிப் பலர் புகழ்ந்து பேசுவதையும் நான் கேட்டுளேன்! பாண்டி நாட்டின் சிறப்பையும் தென்னவனின் கொடைத்திறத்தையும் காதினாலே கேட்டது மட்டும்போதாது என்று கருதி கண்குளிரப் பார்த்து வரவேண்டுமென்னும் ஆசையால் மதுரை மாநகர் சென்று பாண்டியனை நாவால் வாழ்த்தித் திரும்புகின்றேன்! நான் காதால் கேட்டதைவிடக் கண்ணால் பார்த்தது பன்மடங்கு விசேஷமே! தாம் யார்? அதோ அந்த மரத்தடியில் தங்கியிருக்கும் ஸ்திரீகள் யார்? தெரிவித்தல் கூடுமோ?

**கோவலன்:**—முத்தியாளா! நாங்கள் இருப்பது காவிரிப்பூம்பட்டினம்! வியாபாரம் செய்வதற்காக மதுரைக்குப் போகிறோம்! முதிர்ந்த அறிவோடு அதோ வீற்றிருக்கும் பெரியவர் எனது குரு! அவருடைய பெயர் **கௌந்தியடிகள்**! அவரோடுகூட இருக்கும் பெண் எனது மனைவி! அவள்பெயர் **கண்ணகி**! வாருங்கள்! கௌந்தியடிகளைத் தாங்களும் கண்டு சம்பாஷித்துவிட்டுப் போகலாம்! (அந்தணரை கௌந்தியிடம் அழைத்துச் செல்லுகின்றான்).

**கௌந்தி:**—ஹே! பிரமகுல சிரேஷ்டா! வரவேண்டும் (அந்தணரை ஆசீர்வதிக்கிறாள்) (கண்ணகி அந்தணரை நமஸ்கரிக்கிறாள்.) நாங்கள் மதுரைமாநகர் போகவேண்டும்! அதற்காகத் தங்களுடைய உதவியை எதிர் பார்க்கிறோம்!

**கோவலன்:**—ஆம் சுவாமி! தயைசெய்து மதுரைக்குப் போகும்வழியை எங்களுக்கு விளங்கும்படி சொல்லுங்கள்!

**அந்தணர்:**—ஐயா! சொல்லுகிறேன் கேளும்! பாறையும் துறுகலும், கல்லுங்கரடுமாயிருக்கும் இந்தப்பெரிய சுரத்தைக் கடந்து சென்றால், **கொடும்பாளூர் நெடுங்குளம்** என்னும் இரண்டு ஊர்களுக்கும் பொதுவாகிய ஒரு பெரிய ஏரி காணப்படும். அந்த ஏரிக்கரையைத் தாண்டினால், முடியில் பிறைச் சந்திரனை அணிந்த பரமசிவனுடைய சூலத்தைப் போல மூன்று வழிசெல்லுகிறது! வலது கைப்புறமாகச் செல்லும் வழியில் நீங்கள் சென்றால், விரிந்த தலைகளையுடைய வெண்கடம்பும், பொரிந்த தாளையுடைய வாகையும், மூங்கிற் குத்துகளும் காணப்படும். நீருண்டலை விரும்பி மான்கூட்டங்கள் கும்பலாய் நின்று துள்ளி விளையாடும்! இவைகளையெல்லாம் பார்த்து ஆனந்தித்துக்கொண்டே இன்னும் சிறிது தூரம் செல்லுவீர்களேயாகில் "ஐவன வெண்ணெலு, மறைக்கட்கரும்புங், கொய்பூந்தினையுங், கொழும்புன வரகுங், காயமு மஞ்சளு, மாய்கொடிக் கவலையும், வாழையுங் கமுகுந், தாழ்குலைத்தெங்கு, மாவும் பலாவுஞ், சூழடுத்தோங்கிய தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும்." சிறுமலை என்னும் பெயரையுடைய அந்த மலையின் இடதுபுறமாகச் சென்றால் மதுரைக்குப் போகலாம்.

**கோவலன்:**—மலையின் வலது புறமாகச் சென்றாலோ?

**அந்தணர்:**—வலது புறமாகச்சென்றால் சிறகையுடையவண்டுகள் மதுவையுண்டு, யாழைப்போல் ரீங்கார சத்தம் செய்துகொண்டிருக்கும். ஆழ்ந்த தடத்தோடும், தாழ்ந்த வயலோடும், குளிர்ந்த பூங்காவோடும் அருஞ்சுரங்கள் பல காணப்படும்! அவைகளைக் கடந்து சென்றால் **அழகர் திருமலை**யைக் காணலாம். அந்தமலையின் பிலத்துவாரத்துள் சென்றால் தேவர்களால் ஏத்தப்படுதலின் யாவரும் வியக்கத்தகும் மாபினையுடைய புண்ணியசரவணம், பவகாரணி, இட்டசித்தி என்னும் பெயர்களையுடைய மூன்று பொய்கைகள் இருப்பதைக் காணலாம்!

**கண்ணகி:**—அப்பொய்கைகளின் விசேடங்கள் யாவை?

**கோவலன்:**—பொறு! பொறு! அவசரப்படாதே! அந்தணர் எல்லா விவரங்களையும் தெரிவிப்பார்!

**கௌந்தி:**—கண்ணகிக்கு ஆக்கப் பொறுத்தது ஆறப்பொறுக்கவில்லை! (புன் சிரிப்பு)

**அந்தணர்:**—(கண்ணகியை நோக்கி) அம்மா! சொல்லுகிறேன் கேள்! "புண்ணிய சரவணம்" என்னும் பொய்கையில் நீராடினால் இந்திரனாற் செய்யப்பட்ட ஐந்திரவியாகரணம் என்னும் இலக்கணத்தை ஒருவரும் அறிவிக்காமலே ஒருவன் அறிந்து கொள்ளக்கூடும்! "பவகாரணி" என்னும் பொய்கையில் ஸ்நானம் செய்தால் இப்பிறப்பிலே முன்னும் பின்னுமாகிய இரு பிறப்பையும் ஒருவன் உய்த்துணர்ந்து

கொள்ளக்கூடும்! பழவினையை அறிந்து அதை அனுபவித்து இனிமேல் பிறப்பு வரவொட்டாதபடி ஒருவன் செய்து கொள்ளவும் கூடும்! "இட்டசித்தி" என்னும் பொய்கையில் தீர்த்தமாடினல் ஒருவன் தன்னுடைய இஷ்ட சித்திகளைப்பெறுவான்! அதாவது ஒருவன் நினைத்த தெல்லாம் அவனுக்குக் கைகூடும்! இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி என்னும் எட்டு வகை யோகாப்பியாசத்தாலும், தவஞ்செய்து உடலையும் உயிரையும் வருத்தியும், மிக அரிதிலே பெறும் அட்ட மாசித்திகளை ஒருவன் "இட்டசித்தி" என்னும் பொய்கையில் நீராடின மாத்திரத்தால் பெறுவானென்ருல் அந்தப் பொய்கையின் மகத்துவத்தைச் சொல்லவும் வேண்டுமோ?

கண்ணகி:—அந்த மலையின் பிலத்துவாரத்துக்குள் செல்ல வேண்டுமானல் என்ன செய்யவேண்டும்?

அந்தணர்:—அந்த அழகர் மலையில் திருக்கோவில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் திருமாலின் திருவடிகளைக் கையால் தொழுது, மனத்தால் நினைந்து, வாக்கால் துதித்து அம்மலையை மூன்று தரம் பிரதட்சணம் செய்யவேண்டும்! அப்படிச் செய்தால் அங்கேயுள்ள நூபுரகங்கை என்னும் ஆற்றினது கரையில் நிற்கும் ஒரு கோங்கு மரத்தின் கீழே பொற்கொடி போலவும், மின்னல் போலவும், புயல் போன்ற கூந்தலையும் வளைந்த தொடியையும் உடையாள் ஒருத்தி தோன்றுவாள்!

கண்ணகி:—தோன்றி என்ன செய்வாள்?

அந்தணர்:—உங்களைச் சில கேள்விகள் கேட்பாள்!

கோவலன்:—அக்கேள்விகள் யாவை?

அந்தணர்:—"இப்பிறப்புக்கு இன்பமும், மறுபிறப்புக்கு இன்பமும், இவை யிரண்டு மொழிந்து எக்காலத்தும் ஒன்ருந் தன்மையாய் அழிவற நிற்கும் இன்பமும் ஆகிய பொருள்கள் யாவை?" என்று கேட்பாள்.

கண்ணகி:—அந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டாலோ—?

அந்தணர்:—"நான் இந்த மலைக்குக் கீழே வசிப்பவள்! என்னுடைய பெயர் வரோத்தமை! நான் கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லிவிட்டால் உங்களுக்கு நான் உரியவளாவேன்! உங்களுக்கு வேண்டிய காரியங்களை முடித்து வைப்பேன்! இந்தப் பிலத்துவாரத்தின் வாயையும் திறந்து தருவேன்" என்று அந்த பொற்கொடி சொல்லுவாள்.

கண்ணகி:—சரி; அவள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டு பிலத் துவாரத்துக்குள் நுழைந்து விட்டோம் என்று வைத்துக்கொள்ளலாம். அதன் பிறகு என்ன நடக்கும்?

அந்தணர்:—பிலத் துவாரத்துக்குள் நுழைந்து போனல் அநேக வாயிற்படிகள் காணப்படும்! அவைகளை யெல்லாம் கடந்து சென்ருல் இரட்டைக் கதவையுடைய வாயிற்படி ஒன்று இருக்கும்! அதைக் கடந்த வுடன் ஒரு மங்கை சித்திரத்திலெழுதிய பாவையைப் போலத்தோன்றி "முடிவில்லாத இன்பம் யாது?" என்று கேட்பாள்! அந்தக் கேள்விக்கு பதில் சொன்னல் நான் முன்பு சொன்ன மூன்று பொய்கைகளையும் காட்டி அவைகளின் பெயரையும் மகத்துவத்தையும் சொல்லி நீராடும்படிச் செய்வாள் பதில் சொல்லாவிட்டால் வந்தவழியே உங்களைத் திருப்பி அனுப்பிவிடுவாள்! மற்றப்படி வேறு ஒரு கெடுதலும் செய்ய மாட்டாள்! ஆதலால் நீங்கள் மூவரும் சென்று அந்தப் பொய்கைகளில் நீராடி உங்களுக்கு வேண்டிய இஷ்ட சித்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள்! அந்தப் பொய்கைகளின் பயனைப்பெற உங்களுக்கு இஷ்டமில்லா விட்டால் அந்த மலையில் எழுந்தருளி யிருக்கும் திருமாலினுடைய தாமரை மலர் போன்ற திருவடியை நினையுங்கள்! அப்படி நினைத்தால் அப்பொழுதே கருடப்பறவை யெழுதிய துவஜஸ்தம்பத்தை நீங்கள் அடையலாம்! அந்த ஸ்தம்பத்தைக் கண்ட அளவிலே அந்தக் கடவுளுடைய திருவடி உங்களுடைய பிறவித் துன்பத்தை நீக்கும்! நீங்கள் கண்கூடாகக் காணத்தகும் பிலத்தின் தன்மை இப்படிப்பட்டது! ஆதலால் நீங்கள் அங்கு சென்று அக்கடவுளுடைய அருளைப்பெற்றுக் கொண்டு பின்பு மதுரைக்குச் செல்லுங்கள்! நானும் நிலங்கடந்த நெடுமுடி யண்ணலின் தாள்களைத் தொழுவதற்குச் செல்லுகிறேன்! (போக எத்தனிக்கிருன்).

கௌந்தி:—அந்தணரே! சற்று நில்லும்! நான் ஒன்று சொல்லுகிறேன்! அதைக் கேட்டுவிட்டுச் செல்லும்.

அந்தணர்:—அடிகாள்! சொல்லுங்கள்! தாங்கள் சொல்லுவதைக்கேட்க அடியேன் காத்துக்கொண்டிருக்கிறேன்!

கௌந்தி:—நலம்புரிகொள்கை நான்மறையாளா! இந்திரனாற் செய்யப்பட்ட ஐந்திர வியாகரணத்தை நாங்கள் அறிந்துகொள்ளவேண்டிய அவசியமில்லை! ஏனெனில், எங்களுடைய * அருகக்கடவுள் அருளிச்செய்த ஆகமங்களில் ஐந்திரவியாகரணத்திலுள்ள எல்லாப்பொருள்களும் அடங்கி யிருக்கின்றன! ஆதலால் நீர் சொன்ன "புண்ணிய சரவணம்" என்னும் பொய்கையில் நீராடவேண்டியஅவசியமில்லை! தவிர, முற்பிறப்பிற் செய்த வினையின் பயனே இப்பிறப்பில் அனுபவிக்கப்படுகிறது என்பதை நீர் கண்கூடாகப் பார்க்கவில்லையோ? ஆதலால் "பவகாரணி" என்னும் பொய்கையிலும் நாங்கள் நீராடவேண்டிய அவசியமில்லை! திற்க; சத்தியம் கொல்லாமை என்னும் இரண்டினையும் வழுவாது பாதுகாப்பவர்களுக்குக் கைகூடாத காரியங்களும் இருக்கின்றனவோ? இல்லை. ஆதலால் இட்டசித்தியைப்பெற "இட்டசித்தி"என்னும் பொய்கையில் நீராடவேண்டிய அவசியமும் எங்களுக்கு இல்லை! ஆகவே நாங்கள் பிலத்துக்குச் செல்லவேண்டியது அநாவசியமாயிற்று! நீர் விரும்பி வந்த தெய்வத்தைக்கண்டு அடிபணிதற்கு நீர் செல்லலாம்! நாங்கள் மதுரைக்குச் செல்லுகிறோம்!

அந்தணர்:—ஆஹா! அப்படியே! விடைதரவேண்டும்!

கௌந்தி:—சரி; போய்வாருங்கள்! (அந்தணர் செல்லுகிறார்)

கோவலன்:—(கௌந்தியை நோக்கி) அம்மணி! நேரமாய்விட்டது! நாழிகை பத்துக்குமேலிருக்கலாம் போல் காணப்படுகிறது! நாமும் இவ்விடத்தை விட்டுப் புறப்படுவோமே!

கண்ணகி:—ஆமாம்; சாயந்திரத்துக்குள் ஏதாவது ஒரு ஊரை அடையவேண்டாமா? சீக்கிரம் புறப்படுவதே உத்தமம்!

* கௌந்தியடிகள் பௌத்த சந்நியாசியாதலாலும், அருகர் பௌத்தமதக் கடவுளாதலாலும், கௌந்தி மற்ற தேவர்களால் அருளிச் செய்யப்பட்ட ஆகமங்களைப் பற்றிச்சொல்லாது அருகர் செய்ததைக் கூறினாள்.

கௌந்தி:—ஆஹா! அப்படியே! (கண்ணகியை நோக்கி) என்னம்மா! நீ என்னோடு வருகிறாயா, அல்லது உன் கோவலனோடு வருகிறாயா?

கண்ணகி:—இரண்டு பேருடனும் வருகிறேன்! (கோவலனை ஒரு கையிலும் கௌந்தியை மற்றொரு கையிலும் பிடித்துக் கொள்ளுகிறாள்).

கௌந்தி:—சரி; போகலாம்! (கோவலன், கண்ணகி, கௌந்தி மூவரும் அவ்விடம் விட்டு நீங்குகிறார்கள்)

[3-வதுஅங்கம் 3-வது காட்சி முற்றும்]

நாகை. ஸி. கோபாலகிருஷ்ணன்.

---

ஓம் ஸ்ரீ:
ஸ்ரீ சாவித்திரியை நம:

# உபநிஷதர்த்த தீபிகை.

## V. அத்வயதாரகோபநிஷத்.

—:(o):—

ஓம் பூர்ணமத இதி சாந்தி:

[இவ்வுபநிஷத்தானது பெரும்பாலும் மண்டல பிராஹ்மணோபநிஷத்து வாக்கியங்களுக்கு ஒத்து இருக்கும்.]

அத்வயதாரக மென்னும் உபநிஷத்து இந்திரியங்களை ஜயித்தவனும் சமம் முதலிய அறுகுணங்கள் நிறைந்தவனுமான யதியின் பொருட்டு (கர்மங்களின் பலத்தில் ஆசையை விட்டவனான சந்நியாசியின் பொருட்டு) சொல்லப்படும். நான் சித்ஸ்வரூபன் (அறிவே உருவமாயுடையவன்) என்று சதாகாலமும் பாவித்து, கண்களை மூடிக்கொண்டாவது கொஞ்சம் திறந்து கொண்டாவது, அந்தர் திருஷ்டியால் (அகமுக நாட்டப் பார்வையால்) புருவ (மத்தியிலுள்ள) தகரத்திற்குமேல் (தகராகாசமாகிய சிறுஅம்

பலத்திற்குமேல்) சச்சிதாநந்த பிரகாசக்கூட்டரூபமாகிய பரப்பிரம்மத்தை தரிசித்துக்கொண்டு அந்த ரூபமாகிறான். கர்ப்பம், ஜன்மம், ஜரை (மூப்பு), மரணம் (இந்த ரூபமாகிய) சம்சாரமாகிய பெரிய பயத்தைத் தாண்டச்செய்வதால் இதற்கு தாரகம் என்று பெயர். ஜீவ ஈசுவரர்கள் மாயாசம்பந்தமானவர்கள் என்றறிந்து சகல விசேஷங்களையும் நேதி நேதி யென்று (இல்லை இல்லை யென்று) தள்ள, எது மிஞ்சிநிற்குமோ அது அத்வயமான பிரஹ்மம். அது (அப்பிரஹ்மம்) சித்திக்கும் பொருட்டு மூன்று லக்ஷியங்களின் அநுஸந்தானம் செய்யத்தக்கது. அந்தர்லக்ஷியமாவது:—தேகத்தின் மத்தியில் பிரஹ்மநாடியாகிய சுஷும்னையானது சூர்ய ரூபியாய் பூர்ண சந்திரனைப் போல் பிரகாசித்துக்கொண்டு நிற்கின்றது: அது மூலாதாரத்தி லாரம்பித்து பிரஹ்மரந்திரம் வரையில் சென்று நிற்கும். அதன் மத்தியில் கோடி மின்னல்களுக்குச் சமானமான காந்தியுடன் தாமரைத் தண்டின் நூல்போல் சூக்ஷ்மமான அங்கத்தை யுடையதாய் குண்டிலினீ யென்பது பிரசித்தமாயிருக்கும். மனிதன் அதை மனதாலேயே பார்த்து சர்வ பாபங்களின் நாசவாயிலாக முக்தனாகிறான். நெற்றிக்குமேலே இருக்கும் லலாடத்திலுள்ள சந்திரமண்டலத்தில்* சதாகாலமும் தாரக யோகத்தின் ஸ்புரணத்தால் தேஜஸை (பிரகாசத்தை)ப் பார்ப்பானாகில் அவன் சித்தனாவன். சுட்டு விரல்களின் நுனிகளால் மூடப்பட்ட காதுகளி னிரண்டு துவாரங்களிலும் பூத்கார சப்தம் (பூ! என்னும் சப்தம்) உண்டாகும். மனம் அவிடத்தில் நிற்க கண்களின் மத்தியிலுள்ள நீலஜ்யோதி ஸ்தலத்தைப்பார்த்து அந்தர் திருஷ்டியால் (அகமுகப் பார்வையால்) நிரதிசயமான சுகத்தை யடைகிறான். இவ்விதமாக ஹிருதயத்திலும் பார்க்கிறான். இவ்விதம் அந்தர் லக்ஷ்யத்தின் லக்ஷணம் முமுக்ஷுக்களால் உபாசிக்கத் தக்கது.

* விசேஷ மண்டலத்தில் என்றும் பாடமுண்டு.

இதன்மேல் பஹிர் லக்ஷியத்தின் லக்ஷணம்:—மூக்கின் நுனியிலிருந்து நான்கு, ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டு அங்குலங்களுக் கப்பால் வரிசையாய் நீலம், சியாமம் (கருப்பு அல்லது கருநீலம்) சிகப்பு, மஞ்சள், வெண்மைநிறங்களுடன் கூடிய வியோமத்தை (ஆகாசத்தை)ப் பார்ப்பானாகில் அவன் யோகியாவான். சலிக்கும் பார்வையால்* வியோமபாகத்தைப் பார்க்கும் புருஷனுடையபார்வைக்குமுன் ஜ்யோதிக்கிரணங்களுண்டாகும். அதன் தர்சனத்தால் யோகியாகிறான். காய்ச்சின தங்கத்திற்குச் சமானமாகிய ஜ்யோதிக்கிரணங்களை கடைக்கண்ணின்முடிவிலாவது பூமியிலாவது பார்க்கின்றான். அந்தப்பார்வை ஸ்திரமாகும். சிரசுக்குமேல் பன்னிரண்டங்குலமுள்ள ஜ்யோதியைப் பார்ப்பவனுக்கு அமிர்தத்துவம் (மரணமின்மை) உண்டாகும். எங்கெங்கு நின்றாலும் அவனுக்கு சிரசில் வியோமஜ்யோதி தோன்றினலவன் யோகியாகிறான்.

மத்தியலக்ஷிய லக்ஷணமாவது:—தன்னுள் காலையில் அநேக வர்ணங்களுடன் கூடிய அகண்ட சூர்ய மண்டலத்தைப்போலவும், அக்னி ஜ்வாலைக் கூட்டங்களைப்போலவும், இவைகளற்ற ஆகாசத்தைப்போலும் பார்க்கிறான். அதன் ரூபமாய் நிற்கின்றான். அதை மறுபடியும் (அடிக்கடி) பார்ப்பதால் குணமற்ற ஆகாசமாகிறான். பிரகாசிக்கும் நக்ஷத்திரங்கள்போல்வனவால் பிரகாசிப்பிக்கப்பட்டதும் எங்கும் காடாந்தகாரத்துக்கு (மிகுந்த இருளுக்கு) சரியானதுமாகிய பரமாகாசமாகிறான். காலாக்னிக்குச் சமமாய் பிரகாசிக்கும் மஹாகாசமாகிறான். சர்வத்திற்கும் மேன்மையான பரமப் பிரகாசத்தோடு பிரகாசிக்கும் தத்துவாகாசமாகிறான். கோடி சூர்ய பிரகாசத்தின் வைபவத்திற்குச் சரியான சூர்யாகாசமாகிறான். இவ்விதம் பாஹ்யத்திலும் (புறம்பிலும்) அந்தரத்திலும் (உள்ளும்) இருக்கும் வியோம பஞ்சகம் (ஐந்து ஆகாசங்கள்) தாரகத்தின் லக்ஷியமாகும். அதை தர்சிப்

* "சலியாத திருஷ்டியால்" என்றும் பாடமுண்டு

பவன் முக்தியைப் பலனாகவுடையவனாய் அதைப் போல் ஆகாய சமானமாகிறான். ஆகையால் தாரகமே அமனஸ்க (யோக) மாகிற பலத்தைக் கொடுக்கக்கூடிய லக்ஷியமாகும். அதற்கு இந்த சுலோகமுண்டு: "அந்தயோகத்தை பூர்வம் உத்தரம் (முன், பின்) என்கிற பிரிவினால் இருவிதமென்றறி. பூர்வ[பாகம்] தாரகமென்றும் உத்தர [பாகம்] அமநஸ்கமென்றும் [சொல்லப்படும்]." கண்களுக்குள்ளிருக்கும் தாரகங்களில்[கருவிழிகளில்] [pupils of the eye] சந்திரசூர்யர்களின் பிரதிபலனம் உண்டாகிறது. * தாரகங்களினால் சூர்யசந்திர மண்டல தரிசனம் (உண்டாகும்). பிரம்மாண்டத்திற்போல் பிண்டாண்டத்திலும் (தேகத்திலும்) சூரியசந்திர மண்டலங்களிரண்டுண்டென்று நிச்சயித்து, தாரகங்கள் இரண்டிலும் அவைகளின் (சூர்யசந்திரமண்டலங்களின்) தரிசனம் [செய்யவேண்டியது]. இரண்டின் ஐக்கிய திருஷ்டியினால் [பிரம்மாண்டத்திலுள்ள சூர்யசந்திர மண்டலங்களும் தேகத்திலுள்ள சூர்ய சந்திர மண்டலங்களும் ஒன்றேயென்கிற பார்வையால்] மனதுடன் தியானம் செய்யவேண்டியது. அதன் [மனதின்] சேர்க்கையில்லாவிடில் அந்தர பிரவிர்த்திக்கிடமில்லாமற் போய்விடும். ஆகையால் அந்தர் திருஷ்டியால் [அகமுகப்பார்வையால்] தாரகமே அநுசந்தானம் செய்யத்தக்கது. அத்தாரகமும், மூர்த்திதாரகம் அமூர்த்திதாரகமென இருவகைப்படும். எது இந்திரியங்களுக் கப்பாற்பட்டதோ அது மூர்த்திதாரகம்; எது புருவ மத்தியத்திற்கப்பாற்பட்டதோ அது அமூர்த்தி தாரகம். எங்கும் உட்பதார்த்தங்களின் விவேகத்திற்கு [பிரித்தறிவதற்கு] மனதுசேர்ந்த அப்பியாசமேவேண்டும். தாரகங்களால் [அதன் மேலிருக்கும்] * தத்துவத்தின் தரிசனமுண்டாவதால் மனதுடன்கூடிய அகமுகப்பார்வையால் சச்சிதாநந்தஸ்வரூபமாகிய பிரஹ்மமே [அறியப்படுகின்றது]. † ஆகையால் வெண்மையாகிய தேஜோமயமானது [பிரகாசமயமானது] பிரஹ்மமென ஏற்படும். அப்பிரஹ்மமானது மனதுடன்கூடிய கண்ணினால் (அகமுகப்பார்வையால்) அறியப்படும். இவ்விதம் தஹரம் முதலியனவாகிய அமூர்த்திதாரகம் மனதுடன் சேர்ந்த கண்ணால்தான் அறியப்படும்! ஏனெனில் மனமானது கண்ணிற்கு அதீனமாயிருக்கும். வெளிமுகத்திற்போல் அகமுகத்தி

* தாரகமென்கிற பதத்திற்கு நக்ஷத்திரமென்றும் கண்ணின் கருவிழியென்றும் அர்த்தமுண்டு. மண்டலபிராஹ்மண உபநிஷத்தின் பாஷ்யகாரர் மேல்மொழிபெயர்த்த வாக்கியங்களையே பெரும்பாலும் எடுத்தெழுதியிருக்கின்றார். அவர் அபிப்பிராயம் பின்வருமாறு:—பிரம்மாண்டத்தில் சூர்யசந்திரர்களின் கதி [நடை] நக்ஷத்திரங்களை ஆசிரயித்ததாயிருக்கும். ஏனெனில் சலனமற்ற நக்ஷத்திரங்களைக் கொண்டே சலனமுள்ள கிரகங்களின் நிலைகளையும் அவைகளின் நடைக்கு எல்லைகளாகிய பண்டங்களையும் அறிய வேண்டும். அதனாலேயே நாம் சூர்யன் அசுவனி நக்ஷத்திரத்தின் முதற்பாதத்திலிருக்கிறான் முதலிய வாக்கியங்களைச் சொல்கிறோம். தேகத்திலும் இடது வலது கண்களாகிய சூர்யசந்திரகதியானது லயகதிக்கிரமத்தில் தாரகங்களை [கருவிழிகளை] ஒட்டிநிற்கும். அக்கருவிழிகளில் சூர்யசந்திரர்கள் பிரதிபலனமாவதால் அக்கருவிழிகளே [தாரகங்களே] அண்டத்தில் நக்ஷத்திரங்களுக்கு [தாரகங்களுக்கு] அபேதமாகும். தாரகங்களாகிய நக்ஷத்திரங்களால் சூர்யசந்திரர்களின் நடைக்கு எல்லை நிர்ணயிக்கப்பட்டு அவ்வெல்லைக்குட்பட்ட சூர்யமண்டல சந்திரமண்டலதரிசனம் உண்டாகுமெனவே, பிண்டத்திலும் சிரசின் மத்தியிலுள்ள ஆகாயத்திலும் சூர்யசந்திரமண்டலங்கள் உண்டென்கிற நிச்சயத்தால் தாரகங்களால் [கருவிழிகளால்] அம்மண்டலங்களின் தரிசனம், அண்டபிண்டங்களிலுள்ள மண்டலங்களின் ஐக்கியப்பார்வையால் உண்டாகவேண்டுமென வேற்படும். இது அகமுகப் பார்வையானதால் தாரகங்களால் மாத்திரம் கூடும். ஆகவே இந்தயோகத்திற்கும் தாரகமெனப்பெயர். சாதாரணமாய் வேறுவிதமாக தாரக சப்தத்திற்கு பொருள் சொல்வதுண்டு. சம்சாரத்தைத் தாண்டச்செய்வதால் (த்ரு-தாண்டுதல்) தாரகமென்று சொல்லப்படும்.

* சத்துவம் என்றும் பாடமுண்டு.

† மண்டலபிராஹ்மணோபநிஷத் பாஷ்யகாரர் இதற்கு ஆதாரமாக "எது வெண்மையோ அது பிரஹ்மம்" என்னும் அதர்வசிரசின் வாக்கியத்தை உதாகரிக்கின்றார்.

ணும் ரூபத்தை அறிவதான காரியமானது ஆத்மா கண் [பார்வை] இவ்விரண்டின் சேர்க்கையால்தான் உற்பத்தியாகும். ‡ ஆகையால் மனதுடன்கூடிய அந்தர் திருஷ்டி [அகமுகப்பார்வை] தாரகப்பிரகாசத்திற்கு [அதன் தரிசனமுண்டாவதற்கு]க் காரணமாகும்.

இருபுருவ மத்தியிலிருக்கும் துவாரத்தில் பார்வை (வைக்கவும்) அதன் மூலமாக மேலிருக்கும் தேஜசு (பிரகாசம்) உண்டாகவே தாரகயோகமாகும். அதனோடு (பிரகாசத்தோடு) மனதுடன் சேர்ந்த தாரகத்தைபார்வையை நன்றாய்ச்சேர்த்து பிரயத்தனத்துடன் சாவதானமாய் (ஜாக்கிரதையாய்) இருபுருவங்களையும் கொஞ்சம் மேல்தூக்கவேண்டும்.* இது பூர்வபாகமாகிய தாரகயோகம்.

உத்தர(பாக)மானது அமூர்த்தமாகிய அமநஸ்கமெனச் சொல்லப்படும். தாலுமூலத்தின்† மேல்பாகத்தில் பெரிதாகிய ஜ்யோதிக்கிரணங்களிருக்கின்றன. ‡ அது யோகிகளால் தியானம் செய்யத்தக்கது. அதனின்று அணிமாதி சித்திகளுண்டாகும். பார்வையானது அந்தர பாஹிய லக்ஷியங்களில் மூடுதல் திறத்தலற்றிருந்தால் அது சாம்பவீ முத்திரையாகும். அம்முத்திரையில் ஆரூடனான (அம்முத்திரையின் சாதனம் முற்றிலும் வசமுள்ள சாத்தியனான) ஞானி வசிக்கும் பூமி (அவனால்) சுத்தமாகும். அவன் பார்வையால் சகல லோகங்களும் பவித்திர (சுத்த) மாகும். யாதொருவனுக்கு அப்படிக்கொத்த பரமயோகியின் பூஜைகிடைக்குமோ அவன் முக்தனாவான்.

(அவ்வமநஸ்கத்தின்) அந்தர்லக்ஷியம் ஜலஜ்யோதி ஸ்வரூபமாகும். பரமகுருவின் உபதேசத்தால் சஹஸ்ரதள கமலத்தில் ஜலஜ்யோதியாவது அல்லது புத்தியாகிய குகையில் மறைந்திருக்கும் ஜ்யோதியாவது, ஷோடசாந்தத்திலிருக்கும் துரீயசைதன்யமாவது அந்தர்லக்ஷியமாகும். அதன் தர்சனம் ஆசார்யரையே மூலமாக [காரணமாக] உடையதாயிருக்கும்.* வேதசம்பன்னராயும், விஷ்ணுபக்தராயும், மாத்சர்யமில்லாதவராயும் [பொறாமையற்றவராயும்], யோகத்தையறிந்தவராயும், யோகநிஷ்டராயும் [யோகாப்பியாசியாகவும்] எப்பொழுதும் யோகஸ்வரூபராயும் [யோகத்தின் சித்திபெற்று யோகமே தன் ஸ்வரூபமாகவுடையவராகவும்], சுத்தராயும்இருப்பவர் ஆசாரியர் [குரு]. குருபக்தியோடு கூடினவராயும், விசேஷமாகிய புருஷ [ஆத்ம] ஞானமுடையவராயும், இந்த லக்ஷணங்களோடு கூடினவரே குருவென்று சொல்லப்படுவர். [குருவென்கிற பதத்தில்] “கு” என்கிற சப்தம் அந்தகாரத்தை [அஞ்ஞானத்தை]யும், “ரு” என்னும் சப்தம் நாசத்தையும் குறிக்கும். அந்தகாரத்தை [அஞ்ஞானத்தை] நாசம் செய்வதால் “குரு”வென்று சொல்லப்படும். “குருவே பரப்பிரஹ்மம், குருவே பரங்கதி, குருவே பரா வித்யை, குருவே

‡ வெளி முகப்பார்வையில் எப்படி மனமும் கண்ணும் சேர்ந்தால் தான் ஓர் ரூபத்தினறிவுண்டாகுமோ, அதுபோல் அகமுகப்பார்வையிலும் ஆத்மாவுடன் கருவிழியால் குறிக்கப்பட்ட உள்ளிந்திரியத்தின் சேர்க்கையால் தான் மூர்த்திதாரகயோகத்துக்கு லக்ஷியமாகிய மூர்த்திகளின் ரூபங்களும், அமூர்த்திதாரகயோகத்திற்கு லக்ஷியமாகிய சுக்லதேஜோமயமாகிய (வெண்மைப் பிரகாச மயமாகிய) பிரஹ்மத்தின் ரூபமும் அறியப்படுமென்பது பொருள்.

* அப்படிச் செய்வதால் உன்மனீபாவத்துக்குக் காரணமாகுமென்று மண்டலப்பிராஹ்மணோபநிஷத் பாஷ்யகாரர் சொல்லுகிறார்.

† தாலுமூலத்திலிருந்து பனிரண்டங்குலத்தின் கடைசியில் இருள்தோற்றமுண்டாகுமென்றும், அந்த இருளின் நடுவில் பார்வையை நிறுத்த அகண்டமண்டல ஜ்யோதி பிரகாசிக்குமென்றும், அதன் தியானத்தால் மனத்தின் ஸ்திரமும் அதன் வழியாய் வாயுவின் ஸ்திரமும் ஏற்படுமென்றும், ஹடயோகத்தை நூறு வருஷம் அப்பியசித்தாலும் ராஜயோகத்திலாவதுபோல் மனம் வாயு இரண்டின் ஸ்திரத்தன்மை ஏற்படாது என்றும் மண்டலப்ராஹ்மணோபநிஷத் உரையாசிரியர் சொல்லுகிறார்.

‡ ஜ்யோதி மண்டலமென்றும் பாடமுண்டு.

* அத்தரிசனம் குருவினருளால்தான் கிடைக்குமென்பது பொருள்.

பராயணம் [முக்கியமா யடைய வேண்டிய பொருள்], குருவே மேன்மையான முடிவு, குருவே மேன்மையான தனம் [பொருள்]. அதை [பிரஹ்மத்தை] உபதேசிப்பதால் குருவே குருதரமானவர் [மிகவும் மேன்மையுள்ளவர்]." எவன் இதை [இக்குருஸ்துதியை] ஓர் தடவை உச்சரிக்கின்றானோ அவனுக்கு [அது] மோக்ஷத்துக்குக் காரணமாகும். சகல ஜன்மங்களில் செய்த பாபங்களும் அந்த க்ஷணத்திலேயே நாசமடைகின்றன. சர்வ காமங்களையு மடைகின்றான். சர்வ புருஷார்த்தங்களின் சித்தியுமுண்டாகும்.

ஓ° பூர்ணமத இதி சாந்தி꞉

"பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத்பூர்ணமுதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே."

அது பூர்ணம். இது பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணம் உதிக்கின்றது. பூர்ணத்திலிருந்து பூர்ணத்தை எடுக்க பூர்ணமே மிஞ்சுகின்றது.

ஓ° சாந்தி꞉ சாந்தி꞉ சாந்தி꞉

இங்ஙனம் விவேகசிந்தாமணி,
யுபநிஷத் வாக்கியார்த்த தீபிகையில்
ஐந்தாவதான அத்வயதாரகோபநிஷத்

முற்றுப்பெற்று.

---

## ON THE NECESSITY

### Of Mental Training, even for Physical Culture.

### தேகப்பயிற்சிக்கும் மனப்பயிற்சி அவசியமே.

"The readers of your journal appreciate it very much at it contains matter calculated to raise the mental and moral tone."—*The Voice of Truth in the Republic of Letters.*

" மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மன மெங்கில்லை வாயுவு மங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப்பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலயமாமே."

— திருமந்திரம்.



யிற்சி யிரண்டு விதம்: மனப்பயிற்சி, தேஹப்பயிற்சி என்று சொல்லப்படும். தேஹம் என்பது ஸப்ததாதுக்களாலும் சேர்ந்து கட்டப்பட்டு தசேந்திரியங்களாலும் இயக்கப்படும் இயற்கையிலமைந்ததோர் அற்புத யந்திரமாம். இந்த யந்திரத்தைப் பழக்குவது தேஹப்பயிற்சியாம். "சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம், கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றார் ஔவையார். இந்த தேஹம் என்பு, நரம்பு, உதிரம், மாம்ஸம், கொழுப்பு, சுக்கிலம் இவற்றால் விசைக்கப்பட்டு தோலினால் போர்த்தப்பட்டதோர் கூடு. இந்தக் கூட்டுக்குள் வாசம் செய்கிறவர் தசேந்திரியங்கள் என்றுசொல்லும் கருவிமாத்திர உறுப்புக்கள். இந்த இந்திரியங்களை இயக்கும் சக்திவாய்ந்தது மனம். மனதாகிய சூத்திரதாரிக்கு சூத்திரக்கயிறு போலிருந்துதவுவது பிராணன் முதலான வாயுக்கள். முக்கிய வாயுக்கள் ஐந்தோடு அவற்றின் இயக்க விசேஷமான சூக்ஷ்மவாயுக்கள் ஐந்தும் சேர்ந்து ஆகப் பத்துவாயுக்களுக்கும் பொதுவாய் பிராணவாயு வென்றுபேர். பிராணனைக் குதிரையென்றும் மனதைக் குதிரையேறிச் சவாரிசெய்யும் ஆரூடனென்றும் சொல்வர். இவ்விருவரும் ஒத்துநின்றாலன்றி ஒன்றும் பலிக்காது. ஆரூடன் வடக்கேதிருப்பி முடுக்கினால், குதிரை தெற்கேபார்த்து ஓடுவதானால் காரியம் எப்படிமுடியும்? முடியாதே போல், மனம் ஒருவழியிற் சங்கற்பிக்கப் பிராணன் பழக்க வாசனையால் வேறொருவழியிற் சென்றால் ஜீவயாத்திரை இனிதுமுடியாது பழுதுண்டு சிதறிப்போம். இல்லறதர்மமும் அப்படியே. ஆரூடனாகிய புருஷன் ஒருவழியிற் சங்கற்பிக்க இல்லற தர்மத்துக்குப் பிராணனும் ஸ்தானத்திலிருக்கும் இல்லாள் வேறுவழி சென்றாளாயின், " இல்லறமென்னும் இயல்புடைய வான்சகடம் செல்லாது தெற்றிற்று நின்று".

இது இகம் பரமிரண்டிற்கும், விளையாட்டு வினையெல்லாவற்றிற்கும் உண்மையாய்ப் பொருந்து

மொரு உத்தம தர்மமாம். ஸநாதநமான இந்த தர்மத்தை யாவர் அறிந்துணர்ந்து அதன் வழிப்பட்டு நடக்கிறார்களில்லையோ அவர்கள் அல்லற்பட்டு அழிவெய்துவார். இது யோக மார்க்கத்திலும், ஞான மார்க்கத்திலும், இல்லறத்திலும், துறவறத்திலும் தான் பொருந்துமென்பதில்லை. எல்லா விதத்திலும் எல்லாவழியிலும் இதனுண்மை யுள்ளபடிபார்க்கிற் பொருந்தும்.

சென்ற ஆகஸ்டு மீ 29உ திங்கட்கிழமையன்று மாலையில் சென்னை பீப்பில்ஸ்பார்க்கிலுள்ள தென்னிந்தியா தேஹப்பயிற்சி சங்கத்தார் (South Indian Athletic Association) அவர்களுடைய பந்தயஓட்ட சாலையில் பள்ளிப்பிள்ளைகளுடையவும் மற்றவர்களுடையவும் தேஹப்பயிற்சியைத் தூண்டுவதற்கான பந்தய ஓட்டங்களும் விளையாட்டுகளும் வைத்துக்கொண்டு பரிசுகொடுத்தார்கள். அங்கே பந்தயத்துக்கு ஏற்றதாய்க்குறிக்கப்பட்ட விளையாட்டுகளிற் சில பின்வருமாறு :—

(1) கால்நடையாக ஓட்டம்பிடித்தல்—100 கஜதூரம்.

(2) கண்கட்டிக்கொண்டு குதிரையோட்ட மாதிரியோடும் பந்தயம் (Tandem Race) 50 கஜதூரம்.

(3) கண்கட்டிக்கொண்டு ஜலம்நிறப்பிய சட்டியை தூக்கிக்கொண்டு ஓடுதல்—50 கஜதூரம்.

(4) மூன்றுகால் ஓட்டப்பந்தயம். (இருவர் சேர்ந்து மூன்று கால்களால் ஓடுதல்.)

(5) பைஸிகள் ஓட்டம்.

(6) ஒற்றைக்குதிரை கட்டிய ரேக்ளா வண்டியோட்டம்.

(7) ஒற்றைமாடுகட்டிய ரேக்ளாவண்டி யோட்டம்.

(8) தேர்வடம்பிடித்து மல்லுக்கு நிற்றல்.

இதில் முதலாகநின்று பந்தயம் கெலித்தவர்களுக்கு ரூ. 5, 6 முதல் 10, 12, 25-வரையில் வெகுமதி கொடுத்தார்கள்.

முதலாவது பந்தயமான கால்நடையாக ஓட்டம்பிடித்தலில், யார் மூச்சையடக்கிப் பிடித்துக்கொண்டு, பிராணனை முடுக்கியோடப் பழகியிருந்தாரோ அவரே ஜயிப்பர். ஜயித்தவரும் அப்படிப் பழகினவரே.

இரண்டாவதான கண்கட்டிக் குதிரையோட்டமாதிரியோடும் பந்தயத்தில், ஒருவர் கண்ணைக் கட்டிக்கொண்டு முன்னிற்க, அவர்தோளில் குதிரை லகான்போல் வேஷ்டியைப்போட்டுப் பின்னே அதைப் பிடித்து நிற்பர் அவர்தோழர் ஒருவர். முன்னின்றவர் கண்ணைக் கட்டிக்கொண்டு ஓடவேண்டும். பின்நின்று லகான்பிடிப்பவர் அவர்நேரே ஜயஸ்தம்பத்தைநோக்கியோடும்படி லகானைப் பிடித்திழுப்பதாற் சைகை காட்டவேண்டும். இந்தப் பந்தயத்தில் முரட்டுத்தனமாய் ஓடுகிறவன் வழிதப்பியோடுவான். பந்தயம் ஜெயிக்கவேண்டுமானால் இருவருக்கும் வாயுவுக்கும் மனதுக்குமுள்ள ஒற்றுமையிருக்கவேண்டும். கண்மூடி முன்னின்றோடுபவன் வாயுவுக்குச் சமானம். அவன் பின்னின்று இயக்குமவன் இயக்கத்துக்கிணங்கி நேர்வழி யறிந்தோடினாலன்றி அவன் பிரயத்தனம் பலியாது. ஆகவே கண்ணோட்டம் பின்னின்று இயக்குமவனதாகவும், காலோட்டம் முன்னின்றோடுமவனதாகவு மிருக்கவேண்டும். முன்னவன் கால்கள் பின்னவன் கண்களின் நோக்கறிந் தோடவேண்டும். அது எப்படி ? குதிரையானது எப்படி சாரதியின் நோக்கறிந்து ஓடுகின்றதோ அப்படியே முன்னின்ற கண்கட்டி மனிதன் தன் எண்ணமெல்லாவற்றையும் பின்னவன்மேல் வைக்கவேண்டும். பின்னின்று செலுத்துமவன் தன்னெண்ண மெல்லாவற்றையும் ஜயஸ்தம்பத்தில்வைத்து முன்னின்றோடுமவனை நேரே யதனிடம் செலுத்துவதில் கருத்தூன்றி நிற்கவேண்டும். இப்படி இருவரும் பிராணனும் மனமும்போல் ஒத்துழைத்தாலன்றி பந்தயத்தில் ஜெயம் பெறுவது துர்லபமாம். மனமொத்துப் போய்விட்டால் விசையறிந்தோடத் தானேவரும். இஃதெல்லாம் இந்திரியங்களையடக்கி மனவழிப்படுத்தலாலேயே வந்தமையும். முன்னவன்முற்றும் அந்தர்முகமாயிருக்கப் பின்னவன் முற்றும் பஹிர்முகமாயிருக்க, இருவரின் பஹிரஹ முகப்பார்வைகள் ஒன்றுசேர்ந்து ஒருமைப்படவேண்டும். இந்த மனப்பழக்க மில்லாதார் இப்பந்தய ஓட்டத்தில் சிறிதும் ஜயிக்கமாட்டார்கள். இம்மனப்பழக்கம் முற்றும் வெளியாகவேண்டியே, முன்னின்று ஓடும்வரையும் பின்னின்று செலுத்துமவரையும் அவர்கள் ஓடவேண்டிய திசைக்கு எதிர்முகமாக நிற்கவைத்து, கண்ணைக்கட்டி ஓடுந்தருவாயில் திரும்பியோடும்படிச் செய்தார்கள். இந்தச் சூதை யுணரமாட்டாமல் அனேகர் மூலை முடுக்குகளை நோக்கி ஓடிப் பந்தயத்தை இழந்தார்கள். இப்படியே ஒவ்வொன்றிலும் மனப்பயிற்சியில்லாது தேஹப்பயிற்சிமட்டும் பயின்றவர்கள். அவர் தேஹவலிமையைச் சரிவர உபயோகித்துப் பந்தயத்தை ஜயிக்கமுடியாமல்

குருட்டுவழியில் முரட்டுத்தனமாயோடி, மூலைமுடுக்குகளில்போய் முட்டிக்கொண்டு அவமானப்பட்டார்கள். பந்தயம் ஓடினவர்களில் பலர் புல்லாந்தரையில் பந்தய ஓட்டமார்க்கம் இருக்க, கப்பி ரோட்டிலும் மண்தரையிலும் காலடிபடுவது தெரியாமல் பந்தற்கால், தூண், நாற்காலி, பைஸிகிள் முதலானவற்றின்மேலெல்லாம் விழுந்தோடி வீண் துன்பப்பட்டு அவமானத்துக்காளானார்கள்.

இப்படியே ஒற்றைக்குதிரை ரேக்ளா வண்டிப் பந்தய மோடுகையில், முக்கால் வட்டமும் [ரவுண்ட்] முதலாகவே முந்தியோடிய குதிரைவண்டியொன்று, பந்தயம் ஜயிக்கும்படியான காலத்தில் பந்தயவீதியிலேயே சுற்றியோடாது, வந்தவழியை நினைத்துக் குதிரைபாய்ந்தோட, அதை லாகவமாய்த் திருப்பப் பழகாதவன், குதிரையை வெருள அடிக்க அது துள்ளிக்குதித்து ரேக்ளா வண்டிக்காரனையும், "வண்டியையும் கீழேதள்ளி அதுவும் விழுந்து உதைத்துக் கொள்ளநேரிட்டது. இது குதிரையும் குதிரைக்காரனும் மனதொத்துப்பந்தயம் ஓடாமல் முரண்டு கொண்டு ஓடுவதின் பயனாய் முடிந்தது. இப்படி ஜீவயாத்திரையென்னும் பந்தய ஓட்டத்தில் "வாயு மனம் ஒத்த" உத்தமர்கள் காரியகாரணஸித்தி யென்னும் ஜயஸ்தம்பத்தையடைந்து பந்தயம் கெலித்தவர்களாக, அந்த ஒற்றுமைபடியப் பழகாதவர்கள் பந்தயவோட்டத்தில் முந்தியோடியும் பந்தயம் ஜெயிக்காமல் விழுந்தவதிப்பட்ட ரேக்ளா வண்டிக்காரனைப்போல் "குருட்டாட்டமாடி(த்துன்ப)க் குழியில் விழுந்து" வருந்துகிறார்கள்.

தேர்வடத்தைப் பிடித்துக்கொண்டு மல்லுக்கு நின்ற பந்தயத்திலும், தேஹப்பயிற்சியை மனப்பயிற்சியோடு ஒக்கப்பழகிய 'ஸோல்ஜர்கள்' என்னும் போர் வீரர்கள் அவர்களுடைய தலைவர்எதிர்நின்று காட்டிய கைவாய்ச் சைகைகளுக்கிணங்கப் பழக்கவாசனையால் அவர்கள் மனதும் பிராணனும் இசைந்தொழுக எளிதில் வெற்றிபெற்றார்கள். அவர்களை யெதிர்த்துநின்ற போலீஸார் முதலான மற்றொருசாரார், அப்பழக்கமின்றித் தோல்வியடைந்தனர். இப்படியாக தேஹப்பயிற்சிக்கும் மனப்பயிற்சியே முக்கியமும் முதலுமாயிருக்கிறது. இப்படியுள்ள தேஹமனப்பயிற்சிக்குக் காரணம் வாயுமனம் ஒன்றுதலாம். இந்த ஒற்றுமையேமுக்தியு மளிக்கும். யோகசித்தி காயசித்திகளுக்கும் இந்த வாயுமனவொற்றுமையே யின்றியமையாச் சாதனமாம். இதற்கு யோக பரிபாஷையில் கேவலகும்பகம் என்று பேர்சொல்வர். முக்திபெற வேண்டில் உடம்பை ஹிம்ஸித்து வருத்தவேண்டுமென்று நினைப்பது தப்பெண்ணம்.

விதேஹகைவல்யமாகிய உயர்முக்தி பெறுவதற்கும் தேஹமே ஆதாரமாகவுள்ளது. தேஹம் இடையே விழுந்துபோனால் ஆத்மா பூரணமெய்துவது பூஜ்யம்தான்.

"உடம்பாரழியில் உயிராரழிவர்
திடம்பட மெஞ்ஞானம் சேரவுமாட்டார்
உடம்பை வளர்க்கு முபாயமறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே."

என்பது திருமந்திரோபதேசம். ஆகையால் தேஹப்பயிற்சிக்கும் மனப்பயிற்சியே அவசியமாதலால், தேஹமனமிரண்டும் ஒன்றுமிடமாம் பிராணனை வசப்படுத்தல்வேண்டும். இதற்குப் பிராணாயாமமென்று பேர். இந்த பிராணயாமசித்தி பெற்றோர் இகம்பரமிரண்டிலும் பெறலரும் பேறெல்லாம் பெற்றுவாழ்வார் என்பதற்கையமில்லை. இந்த வுண்மைபற்றியே பார்ப்பனச்சிறுவர்க்கு 7-வயதில்தானே உபநயனம்செய்து பிரஹ்மோபதேசத்தோடு "பிராணாயாம அப்பியாஸம்" பழகிவரக் கற்பிக்கிறார்கள். அதற்கு பிரஹ்மோபதேசம் என்னத்திற்கு என்றால் பிராணாயாமஸித்தி ஸர்வ சக்தியையுங்கொடுக்க வல்லதாகையால், அஃது உத்தமமானஉயர்லக்ஷியமின்றி யப்பியஸிப்பார், அசுரபாவம் தலையெடுக்கப் பெறுவரேல், உலகுக்கே தீங்கு விளைப்பவராவர். ஆகையால் அறியத்தக்க வெல்லாவற்றிலும்மேலாய் அறிவறிதாயுள்ள பிரஹ்மோபதேசம் ஒன்றின்பொருட்டே பிராணயமம் தர்மவழியில் உபதேசிக்கத்தக்கது. இது பெரியோர் ஏற்படுத்திய உயர்லக்ஷியம். அஃதைக் குறுக்கி நறுக்கிக் குறைவுபடப்பழகிச் சிறைப்பட்டுழல்வார் எத்தனையோ பேர். அவர்களைப்பற்றி நாம் ஒன்றும்சொல்லவரவில்லை. உண்மையைச்சொல்லி உத்தமவழியைக் காட்டலாமேயன்றி, மத்தியமவழியைக் . காட்டுவது முறையல்ல.

ஓம்தத்ஸத்.

## ON DISEASE or SICKNESS.

## நோய்.



க்களாய்ப் பிறந்தார்க்கு நேரும் துன்பங்கள் பல வற்றுள்ளும் 'நோய்' அல்லது 'பிணி'யும் ஒன்றாகும். யாக்கையை இழித்துக் கூறுவதற்கு முதற்காரணம் அது நோயணுகுதற்கிடனாயிருத்தலேயாம். இது பற்றியன்றோ 'பொல்லாப்புழுமலி நோய்ப்புன் குரம்பை' என்றார் பிறரும். யாக்கையைப் புன்மைபடுத்தும் இந்நோய் இன்றேல் மானுடவாழ்க்கைபெரிதும் பயனுடைத்தாதலும், நோய் உளதேல் அது பயனின்றாய்க் கழிதலும் உண்டோ எனின், உண்டு. எவ்வாறெனின்; கூறுதும். உலகத்தவாற் பெரிதும் மதிக்கப்படுவது செல்வம். ஏனெனின் அஃது "அறனீனும் இன்பமுமீனும்." இத்தகைய செல்வமோ குறையின்றி எந்நாளும் நிலைத்திருப்பதன்று. 'நிறைசெல்வம் நீர்ச்சுருட்டு நெடுந்திரைபோல் குறைதலும் நிறைதலும் அறவேயழிதலுமாகிய இயல்பிற்று. ஆனால் இச்செல்வம் குறைவற்றதாயின் இதன்பெருமை எத்துணையாகும்? குறைவற்ற செல்வம் ஒருவர்க்குக் கிட்டுமாயின் அதை அவர் மறுப்பாரோ? மறார். குறைவற்ற செல்வத்தோடொப்ப நோக்கத்தக்கது வேறொன்று கிடைப்பினும் அதனையும் மறார் என்பது திண்ணம். குறைவற்ற செல்வத்தோடொப்பது என்னையெனின் நோயற்றவாழ்வேயாகும். 'நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வம்' என்ற பண்டையோர் கூற்றுமுண்டு. ஆதலின் நோயின்றேல் மானுடவாழ்க்கை பெரிதும் பயனுடைத்தாகும். 'எழுமையும் 1 ஏமாப்புடைய' கல்வியைக்கற்றற்கும் இன்னும் மானுடதேகம் எடுத்ததற்கு இன்றியமையாது செய்யவேண்டுவன பலசெய்தற்கும் இடையூறாயிருத்தலான் நோயுளதேல மானுடவாழ்க்கை பயனின்றாய்க் கழியுமென்க. அற்றேல் இந் நோயினைப்பற்றி நாம் நன்காராய்தல்வேண்டும். முதற்கண் நோயாவது என்னையென்று விசாரிப்பாம்.

*'மிகினுங் குறையினும் நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.'

அஃதாவது உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த அளவினவன்றி அதினின் மிகுமாயினுங் குறையுமாயினும் பெரியோரால் சொல்லப்பட்ட வாதம், பித்தம், சிலேட்டுமம் என்னும் மூன்றுவகையான துன்பமே நோயெனப்படும். இதனாலே நோய் இன்னதென்பதும், அது உண்டாதற்குக் காரணமும் அறிந்தாம்.

உணவுஞ் செயல்களும் மிகாமலும் குறையாமலும் இருக்குமேல் நோய்கள் வாராதோ வெனின் அப்போழ்தும்வரக்கூடும். ஆயின் அவை பழவினையான் வருவனவாதலின் அதன் கழிவின்கணல்லது தீராது. ஆகவே ஏனைக் காரணங்களால் வருவனவற்றையே நாம் ஆராயவேண்டும். உணவு ஒத்தலாவது சுவை வீரியங்களானும் அளவானும் பொருந்துதல். வாதபதார்த்தங்களையே மிகுதியுமுண்ணலும், பித்தபதார்த்தங்களையே மிகுதியுமுண்ணலும், சிலேட்டும பதார்த்தங்களையே மிகுதியுமுண்ணலும் ஆகாது. மூன்றையும் சமமாகக் கொள்ளல் வேண்டும். அளவிலும் அவ்வாறே. ஈண்டு அளவென்றது உணவளவும் கால அளவுமாம். உணவு உருசியாயிருக்கும் காரணம் பற்றியாவது வேறு எக்காரணம் பற்றியாவது மிகுதியாயுண்டலும், மற்றை அமயங்களில் குறைவாயுண்ணலும் ஆகாது. கால அளவாவது குறித்த காலத்திற் சாப்பிடுவதாம். காலையுணவை இன்று காலை ஐந்து நாழிகைக்கும் நாளைக்காலை எட்டு நாழிகைக்கும், மறுநாட்காலை பத்துநாழிகைக்கும், இவ்வாறு மாறுபட்ட நேரங்களில் அருந்துதல் கூடாது. இனிச்செயல்களொத்த

1. ஏமாப்பு=உதவுதல்.

லாவதீ மனமொழி மெய்களாற் செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே யொழிதல். எந்தக்காரியத்திலும் தன் சக்திக்கு மேற்பட்டு உழைத்தல் உடம்பிற்குக் கெடுதியை உண்டாக்கும். நோய்க்கு முக்கிய காரணமாயிருப்பது நாமுண்ணும் உணவேயாம்.

*மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

ஒருவன் முன் உண்டது ஜீரணித்தாயிற்று என்பதைக் குறிகளாற் றெளியவறிந்து பின் உண்ணுவானாயின், அவன் யாக்கைக்கு மருந்தென்று வேறு வேண்டியதில்லை. உண்ட உணவு அற்றதற்கு ஜீரணித்ததற்கு அறிகுறியாவது உடம்பு பலங்குன்றுதல், வயிற்றில் நெருப் பெரிவது போலிருத்தல் முதலியன.

பெறுதற்கரிய மானுடதேகம் பெற்றானொருவன் அவ்வுடம்மை நெடுங்காலம் கொண்டு செலுத்த விரும்புவானாயின் முன் உண்ட உணவு அற்றதறிந்து பின் உண்ணும் உணவை அளவோடருந்தல் வேண்டும். இதனாலன்றோ

*அற்றா லளவறிந்துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்குமாறு.

எனப்பணித்தார் அறிவானன்ற பெரியாரும். உணவு கொள்ளும்போது ஒன்றற்கொன்று மாறுபாடான உணவுகளைக் கொள்ளுதல்கூடாது. தேனும் நெய்யும் தம்முள் ஒத்து நஞ்சாதல் காண்க. உண்ணும் பதார்த்தங்களின் குணகுணங்களை அறியாது மனம் பட்டவாற்றாற் 2 றுய்ப்பின் அதனானே நோய்ம்மரணமும் வருதலின் ஒவ்வொன்றின் குணகுணத்தை நன்றாய்க்கடைப்பிடித்தறிந்து உண்ணல்வேண்டும்.

*அற்றதறிந்து கடைப்பிடித்துமாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

என்ற நாயனார் வாக்கை உற்று நோக்குக.

*மாறுபாடில்லாத வுண்டிமறுத்துண்ணின்
ஊறுபாடில்லை உயிர்க்கு.

என்றபடி முன்சொல்லப்பட்ட மூவகைமாறு கோளுமில்லாத உணவைத் தன்னுள்ளம் வேண்டிய அளவோடல்லாமல் பிணிவாரா அளவில் ஒருவன் உண்பானாயின் அவனுக்குப் பிணி வராது.

உண்ணக்கூடிய அளவிற்குச் சிறிதுகுறைய உண்டலே நல்லது. பெருந்தீனி தின்பதுமாகாது. சிலர் மாடுமுதலிய மிருகங்கள் இரையெடுப்பதுபோல் அளவுகடந்த உணவு அருந்துகிறார்கள்.

*இழிவறிந்துண்பான் கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய்

என்றபடி அன்னார் மாட்டு நோய் குடிகொண்டிருக்குமென்பதற் கையமில்லை.

*தீயள வின்றித் தெரியான் பெரிதுண்ணில்
நோயள வின்றிப் படும்.

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் திருவாய்மலர்ந்தருளியாங்கு தனக்கு வேண்டிய உணவை வேண்டியகாலத்தில் வயிற்றுத்தீயளவுக்குமேல் ஒருவன் உண்பானாயின் அவனிடத்து நோய்களும் அளவுக்கு மேலதிகமாய் வளரும். இதுகாறும் நோயின் இயல்பும், அதன்காரணங்களும், அதைத்தடுப்பதற்கேற்ற மார்க்கங்களும் இவையென உரைத்தோம். இனிநம் காப்பைக் கடந்து நோய்வந் துற்றதாயின், அப்பொழுது செய்யவேண்டுவ திவையென்று கூறுவோம்.

நோயைத்தீர்க்கு முபாயமே மருத்துவமெனப்படும். நோயுற்றதறிந்த வுடனேயே மருத்துவ நூலிற்றேர்ந்த ஒருவனைக் கொண்டு அதற்குத்தக்க சிகிச்சைசெய்தல் வேண்டும். நோய்க்குச் சிகிச்சைசெய்வான் தேர்ந்தெடுக்கப்பட்ட வைத்தியன்.

*நோய்நாடி நோய்முதல் நாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்

வேண்டும். அன்றியும்,—

2 துய்ப்பின்=உண்டால்.

* உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்

வேண்டுவ தவசியம்.

*உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

என்றபடி பிணிக்கு மருந்தாவது, நோய் உற்றவன், அதனைத்தீர்க்கும் மருத்துவன், அவனுக்குக் கருவியாகிய மருந்து, மருத்துவன் சொல்லியபடி மருந்துகளைச் செய்பவன் என்று சொல்லப்பட்ட நான்கு பகுதியை உடைய நான்கு திறத்தது. அவற்றுள் உற்றவன் வகை நான்காவன:—பொருளுடைமை, மருத்துவன் வழிநிற்றல், நோய்நிலை யுரைத்தல் வன்மை, மருத்துத் துன்பம்பொறுத்தலெனவிவை. தீர்ப்பான் வகைநான்காவன:-பலபிணிநோய் காண்டற்கஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதிய கல்வியு நுண்ணறிவு முடைமை, பலகாலுந் தீர்த்துவருதல், மனமொழிமெய்கள் தூயவாதலெனவிவை. மருந்தின்வகைநான்காவன:-பலபிணிகட்கு மேற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதினெய்தப்படுதல் பகுதியோடு பொருந்துத லெனவிவை. இயற்றுவான் வகை நான்காவன, [3]ஆதுரன் மாட்டன் புடைமை, மனமொழிமெய்கள் தூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல்வன்மை. அறிவுடைமையென விவை. இவை யெல்லாங் கூடிய வழியல்லாது பிணி தீராமையின் மருந்து என்பதற்கு இவை இன்றியமையாது வேண்டப்படுவனவாம். ஆயுள்வேத முடையார் இவை கால்களாக நடக்கு மென்பது பற்றிப் பாதம் என்றும் இவை மாறுபட்டவழிச் சாத்தியமும் முதிர்ந்து அசாத்திய மென்றுங் கூறுவர்.

டி. எஸ், தியாகராஜஞானியார்.

---

N. B. இவ்வியாசம் திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளித் திருக்குறளின் **மருந்து** என்னும் அதிகாரத்தையே ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது.

* திருக்குறள்.

3. ஆதுரன்=நோயாளி.



விவேகசிந்தாமணி கையொப்பக்காரர்களுக்கறிக்கை.

நமது கையொப்பக்காரர்களி லனேகர் இன்னமும் அவர்களது சந்தாபாக்கியைச் செலுத்தாதுவைத்துக்கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இந்தமாதக்கடைசிக்குள் கையொப்ப பாக்கியை யனுப்பாவிடில் அடுத்த சஞ்சிகை இவர்களுக்கு V. P. P.—மூலமாயனுப்பப்படுமென்பதை யறியவேண்டியது. மூன்றுமாசத்துக்குமேல் சந்தா பாக்கியிருந்தால் அது V. P. P. மூலமாய் வசூல்செய்யப்படுமென்று இதனால் எல்லாருக்கும் தெரிவித்துக்கொள்கிறோம்.

—அ. ப. ஏஜன்ஸி காரியதரிசி.